உ

சிவமயம்.

# புலிப்பாணிமுனிவர்

அருளிச்செய்த

# பலதிரட்டுஜாலசிதம்பரம்.

இஃது

வீரணன் தோட்டம்

மதுரைமுதலியாரால்

பரிசோதித்து

அ-வீராசாமிநாயகரவர்களால்

தக்கோலம்

நரசிம்முலுநாயகரவர்களது

விவேகசந்திரோதய அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விபவஹு-வைகாசிமீ.

உ

கடவுள் துணை.

புலிப்பாணிமகாமுனிவரருளிச்செய்த [illegible]ந்நூல்

# அகராதி.





உ

சிவமயம்.

# புலிப்பாணிமுனிவர்

அருளிச்செய்த

# பலதிரட்டு சூத்திரம்.



காப்பு.

வேதாந்தநாயகியே விமலவேணி... ... ... .
வீரமாகாளியம்மாள் ருத்திரரூபி ... ... .
நாதாந்தப்பொருளே யகோரிவீரி... ... ... .
நாரணியேகாரணியே தேவிசத்தி ... ... .
மூதாந்தமூர்த்திபரா பரையேதுர்க்கை ... .
மூவருக்குமுதற்பொருளே யானந்தாயி ... .
மாதாந்தந்தமையீன்ற ஏகவல்லி... ... ... .
மாமுகத்தோன்பலதிரட்டு காப்புத்தானே ... (க)

நூல்.

## முப்பூமுறை.

தானென்றமுப்பூவைச்சொல்லக்கேளு ... ... .
தருவானவண்டமடா வாதியாதி... ... ... .
கானென்றவண்டத்தைக் கொண்டுவந்து ... ... .
கடிதாகநொறுக்கியதை ரூபாயபோலே ... .
மானென்றபூநீற்றைக் கரைத்திறுத்து ... ... .
மைந்தனேயதிற்போட்டுக் குறுகக்காய்ச்சிப்... ... .
பானென்றஜலம்விட்டுக் கழுவிப்போடு ... ... .
பண்பானரவிதனிலே யுலரப்போடே ... (உ)

போட்டேநீசுண்ணக்கல் நாலுநாழி ... ... .
போட்டதிலேநீரூற்றி விட்டுநீற்றி ... ... .
காட்டேநீகலக்கியதைத் தெளியவைத்து ... ... .
நாயகனேயிறுசட்டி தனிலிறுத்துக்... ... .
கூட்டேநீயண்டஜல மதிலேபோட்டுக் .. ... .
குறுக்கியேகாய்ச்சியதை யெடுத்துக்கொண்டு... ... .
ஆட்டேநீகுழிக்கல்லி லிந்நீர்விட்டு... ... ... .
அப்பனேமைபோல வரைத்துத்தீரே ... ... (௩)

நீரேநீயுலாவைத்து வில்லைபோலே... ...
திறமாகக்காய்ந்தபின் பெடுத்துமைந்தா... ... *
ஓரேநீயுலையில்வைத் தூதலூது ... ...
சின்மயத்தின்சுண்ணமதை யென்னசொல்வேன்... *
பாரேநீசுண்ணமது ஆகுமட்டும்... ... ... *
பாங்காகஇந்நீரி லரைத்தேயூது ... ... ...*
வீரேநீகரைத்தேற்றி மைந்தாநீயும்... ... ...*
விதமானசுண்ணமதைக் கலக்கிப்போடே ... (௪)
போடேநீகாரையினற் பாத்திகட்டிப் ... *
பொங்கமுடன்வெந்நீரை யதிலேவாரு... ... *
நாடேநீயதைவழித்துக் கரைத்துநன்றாய் ... *
நாயகனேதெளிவிறுத்து நவநாள்வாரு ... ... *
ஆடேநீரவிதனிலே யுலரவைத்து ... ... ...*
அப்பனேயன்பாகச் சத்திபூசை ... ... *
தேடேநீகணபதியின் பூசைசெய்து ... ... *
திறமாகக்குப்பியினி லடைத்துவையே... ... (௫)
வையேநீமேலச்சாம்ப ல்முரிநீரில் ... ... ...*
வகையாகச்சமன்கொண்டு கலக்கித்தேற்றிச் ... *
செய்யேநீதெளிவிறுத்துப் பாத்திதன்னில்... ... *
செயலாகவொன்பதுநாள் மட்டும்வாரு ... *
மையேநீயுப்பாகு மெடுத்துக்கொண்டு... ... *
மைந்தனேகுப்பியிலே பதனம்பண்ணு... ... *
கையேநீயுப்பெல்லா மிந்தப்பாகம்... ... ...*
கருவாகவெடுத்தாக்கா லுப்பேயாமே... ... (௬)
உப்பானமுப்பூவைச் சமனாய்ச்சேர்த்து ... ...*
உத்தமனேமாதர்விடாய் நீராலாட்டி... ... *
ஒப்பாகவில்லைசெய் துலரவைத்து ... ... *
ஒளிவானமுழப்புடத்தி லுகந்துபோடு... ... *
வெப்பானபுடமாறி யெடுத்துக்கொண்டு ... ...*
விதமானகுப்பியிலேவைத்துப்பூசி... ... *
செப்பானமுப்பூவின் சுண்ணத்தாலே... ... *
செயமாகுந்தொழில்களெல்லாஞ்சித்திதானே ... (௭)

ரச்க்கட்டு.

சித்தியாய்ரசக்கட்டு சொல்லக்கேளு ... *
சிறப்பானவன்றியின் பாலாற்கட்டு ... ...*

புத்தியாய்க்குட்டியெல்லா மடைத்துவைத்துப் ... .
பொங்கமுடனுதயாதி துடங்கும்போது ... .
வெழ்ழியாய்குட்டியொன்று குடிக்கவிட்டால் ... .
விதமாகப்பால்பிரம்பி மூக்கிற்சிந்தும் ... .
பத்தியாயப்பவனமுடன் பிசைந்தழுத்திய... ... .
பாங்காகச்சத்தியாய் ரசத்தைவாரே ... (அ)

வாரோநீவிராகனெடை யைம்பத்தொன்று... ... .
வளமாகமுன்சொன்ன முப்பூச்சுண்ணம் ... .
பாரேநீவிராகனெடை யொன்றுதூக்கிப்... ... .
பதமாகச்சத்தியுட பூசைசெய்து ... .
சீரோநீவாயிலிட்டுச் செலுத்திப்போடு ... .
செம்மையாய்வாய்மூக்குங் காதுந்தைத்துத் ... .
தேரோநீடிதுப்பாண்ட மதிலேயிட்டுத் ... .
திறமாகவெடுக்கரச மணியுமாமே ... (கூ)

ஆமேநீநாகமொன்று தங்கமொன்று ... .
அடைவாகரசக்கட்டு ஒன்றுங்கூட்டி ... .
வாமேநீதங்கமதை யுருக்கிக்கொண்டு ... .
வளமாகரசக்கட்டு நாகஞ்சேர்த்து ... ... .
தாமேநீசெம்பதிலே பத்துக்கொன்று ... .
தான்கொடுக்கவொன்பதனை மாற்றுமாகும் ... .
நாமேநீகெந்தியிட்டுச் செந்தூரித்தால் ... .
நாயகனேநவலோக வேதையாமே ... (ய)

திலகமுறை.

ஆமேநீவசியமொன்று மையைக்கேளு ... .
அமைவானகஸ்தூரி மஞ்சளப்பா ... ... .
வாமேநீபூசியென்ற காந்தந்தானும் ... ... .
வளமானரோசனை கிராம்புகூட்டித் ... .
தாமேநீயச்சையென்ற பூரத்தோடு ... .
தயவானசாதிக்காய் விராகன்கால்தான் ... .
நாமேநீயிவையெல்லாம் பொடியாய்ச்செய்து .. .
நாயகனேவெண்டுகிலில் நீபரத்தே ...(யக)

பாத்திலேதலைமஞ்சங் கொடியுங்கூடப் ... .
பண்பாகக்குளிபாதந் தன்னிலினைந்து... ... .

அரத்தியேகிரியாக்கிக் கருச்சிலைசுற்றி ... ...
அப்பனேதாமரைநூல் மேலேசுற்றி... ...
வரத்தியேகாராவி னெய்யைத்தானும் ...
வளமானசிரசோடு தன்னிலிட்டு ... ...
சிரத்தியேசிரசோட்டில் நெய்யைவார்த்து... ...
சிவசிவாவிளக்கேற்றி மையைவாங்கே ... (௰உ)
வாங்கியேபுழுகுடன்சவ் வாதுங்கூட்டி ...
வளமாகமுத்திரித்துச் சிமிழில்வைத்துப் ...
தாங்கியேமோகினிக்குப் பூசைசெய்நீ ...
பண்பானமந்திரத்தான் சொல்லக்கேளு ...
தாங்கியேபூசையது வாலைபூசை... ... ...
தயவாகப்பூசித்துத் தியானமோது ... ...
ஆங்கியயேஸ்ரீம்ஹ்ரீம் கிலீமென்றுரேசி ...
ஆங்குருஷணிமோகினீயென்றங்கெண்ணே ... (௰௩)
எண்ணவேதியானமொரு லட்சமோது ...
என்னசொல்வேனுலகமெல்லாம்வசியமாகும் ...
கண்ணவேதங்கத்தால் வெள்ளியாலும் ...
நல்லசிமிழ்குச்சுசெய்து திலகம்யோடு ...
மண்ணவேதேவராட் சதர்கள்தானும் ...
பண்பானபுருஷரொடு மாதர்யாரும் ...
அண்ணவேகேட்டதெல்லாமீவார்பாரு... ...
அப்பனேபுகையெல்லாமற்றுப்போமே... ...(௰௪)
போமேதான்மாற்றமொன்றுசொல்லக்கேளு ...
பொலிவானஐங்கோலப்பிண்டம்வாங்கி ... ...
ஆமேதான்குரணித் தெடுத்துக்கொண்டு ...
கூயலியாள்நூலிபிலேவைத்துருட்டி ...
ஆமேதால்சிரசோட்டில்காராநெய்யில் ...
அப்புனேமையெரித் தெடுத்துக்கொண்டு ...
வரமேதான்திலகமிட மறையும்பாரே ... ...
வளமானமாற்றமீ ததிகசித்தே ... ...(௰௫)

அஞ்சனம்.

சித்தான அஞ்சனந்தான் சொல்லக்கேளு ...
சிறப்பானமூலிகையொன் றுரைப்பேன்மைந்தா ...
மூத்தானஆடாதோடை மூலியப்பா ... ...
முதன்மையாமதினுடையபழுங்காய்கண்டு ...

ஐந்தானஎண்பேதமெட்டுஞ்செய்து ... ...
பண்பானவதிலுண்டாய் கிழங்குவாங்கி ...
சித்தானகுழியம்மிதன்னிலப்பா ... ...
விதமானகிழங்கதிலேவிராகன்போடே (௰௬)

போடப்பாவதிலுண்டாம் பழந்தானேயா ...
பொங்கமுடன்கோரோசினையுப்புங்கூட்டி ...
ஆடப்பாவிளக்கிட்டுச்சாரணைநெய்யர்... ...
லன்பாகவெட்டுண்டசிரசிறேட்டில் ... ...
கூடப்பாமையெரித்தெடுத்துக்கொண்டு ...
கூர்மையாம்சற்குருவின்பாதம்போற்றி... ...
நீடப்பாமுக்காலும் பூசைசெய்து ... ...
நினைவாகப்புற்றினிடதேனிலாட்டே ... (௰௭)

ஆட்டையிலேகுழியம்மிவெடித்துக்காணு ...
மப்பனேயாதாளங்கெசமாய்த்தோணும்
கூட்டையிலேவழித்தெடுத்துச்சிமிழில்வைத்துக் ...
குருவானகணபதிக்குப் பூசைசெய்து ...
நீட்டையிலேயஞ்சனுதேவியனுமார்க்கும்... ...
நிச்சயமாய்ப்பூசைசெய்துகண்ணிற்போடு ...
காட்டையிலேநதிகளெலாங்கண்ணிற்றேன்றுங் ...
கனிவாகக்கிண்டியதையெடுத்துக்கொள்ளே (௰௮)

மாரணம்.

கொள்ளவேமாரணத்தைச்சொல்லக்கேளு ...
கொடிதானயாவமடாசொல்லொணாது ...
அள்ளவேமாரணசக்கரத்தைக்கீறி ... ...
அடைவாகநீர்மலமுங்காற்கீழ்மண்ணும் ...
விள்ளவேகருவதிலேயரைத்துப்பூசி ... ...
விதமானவல்விபெருமழுந்தகாட்டித் ...
தள்ளவேகாகத்தின்வாயினுள்ளே ...
தான்செலுத்தித்தலைகீழாய்த்தூக்கிக்கட்டே ... (௰௯)

கட்டியேசமர்த்தென்ன வெட்டியப்பா ...
கருவானநிம்பநெய்யிலோமம்பண்ணு ...
தெட்டியேதென்முகமாயிருந்துக்கொண்டு ... ...
திறமாகச்செபிக்குமந்திரத்தைக்கேளு ...

சிட்டியேமசிகசியென்றேபோது... ... ... *
கிருபையுடனெட்டுநாள்செபித்தாயானல் ... *
செட்டியேவாங்குமடா ஆரானாலும் ... ... *
சிமிஷத்திற்கொல்லுமடாகண்டுபாரே ... (௨௰)

### பேதனம்.

பார்ப்பாபேதனத்தைச் சொல்லக்கேளு ... ... *
பண்பினலுமத்தங்காய்தான்மொட்டை ... *
சேரப்பாவெதிரியிடகாற்கீழ்மண்ணும் ... ... *
சிறப்பாகவதிற்செலுத்தியவன்பேர்காட்டி ... *
வீரப்பாபேதனத்தைநன்றாயோதி ... ... *
விதமாகவவனிருக்குமூனைச்சுற்றி ... ... *
கூரப்பாமயானத்திற்புதைக்கும்போது ... *
குருவானகருக்கூட்டிபுதைத்துப்போடே (௨௧)
புதைத்தவுடன்பக்கமதிற்பிரமைகொள்ளும்... ... *
பொல்லாதகோஷ்டியெல்லாமனேகஞ்செய்யும் ... *
வதைத்தமட்டுந்தேசமெங்குஞ்சுற்றிமாள்வான் *
வையகத்தோர்தான்பழித்துச்சிரிப்பார்பாரு ... *
பதைத்துபதைத்தலேந்தலேந்தழுவானப்பா *
பழிகாரன்பாவியவனென்னசொல்வேன் ... *
கதித்தமனத்துடன்வந்துகாலில்வீழ்ந்தால் ... *
கருவாகவதையெடுத்தாற்றிப்போடே ... (௨௨)

### வித்துவேஷணம்.

போடவேவித்துவேஷணத்தைக்கேளு ... ... *
சொலிவானவேம்பின்மேற்காக்கைகூடு ... *
நாடவேகழுதையுஞ்சடையுங்கூட்டி ... ... *
நாயகியாளறுத்தகயிறதுவுஞ்சேர்த்து ... *
கூடவேபஞ்சவெட்டியறுந்துபோன ... ... *
குணமானசிரம்பதுவும்பன்றிரோமம் ... *
சாடவேபித்தளைகம்பித்தக்கூடை... ... ... *
சலாயனச்சுளகுடனேசித்தியாமே... ... (௨௩)
ஆமேநீமூச்சந்திமீதில்மண்ணு... ... ... *
மப்பனேயுட்கொளுத்தியடுப்பில்வைத்து ... *
தாமேநீதென்முகம்நிர்வாணரூபந் ... ... *
தயவாகத்தான்சுட்டுச்சாம்பலாக்கி ... *

வாமேயேறுகோணமீதிற்கீறி ... ...
வளமாகதூமசி யென்றுநாட்டி ... ...
நாமேமந்திரந்தான் தூம்தூம்சிசி ... ...
[illegible]யோம்நசிநசியென்றேயோதே ... (உச)

ஓதியேயெடுத்துவைத்தெதிரிபேரை ... ...
ஒளிவாகத்தான்மூடிந்திறப்பில்வைக்க ...
பாதியேபடிவாசல்தூக்கிப்போட்டால் ... ...
பதிகெட்டுஇருவருமேபிரிந்துபோவார் ...
வாதியேவடமொழியில் முன்னோர்சொன்ன ...
வளமானவழியெல்லாந்தமிழிலப்பா ... ...
நீதியேதப்பாமலெடுத்துநன்றாய் ... ...
நீணிலத்தோர்தான்பிழைக்கப்பாடினேனே ... (உரு)

பாடியேநரம்பெலும்புமயிருங்கூட்டிப் ...
பண்பில்லாச்சுடலையுடசாம்பல்சேரு ...
ஆடியேயுடும்பினதுதலையுங்கூட்டி ... ...
யப்பனேநாய்ப்பல்லுமதனிற்சேர்த்து ...
சூடியேயெட்டியிலேமாடன்செய்து... ... ...
சுகமானபுதுக்கலசந் தன்னில்வைத்து... ... ...
நாடியேயிதுவெல்லாமதனிற்போட்டு ... ...
நலமானமாடனைவிட்டோதுவாயே ... ... (உசு)

ஓதவேவண்ணாரவுகிரமாடன்... ... ...
ஒளிவானவக்கினிசண்டிவிஞ்சைபாரு ... ...
வாதாகக்கறுத்தநாய்போலுமிக்க ... ...
வளமானகுரங்குபோல்பூனைபோலும் ...
ஆதாரவாய்ப்புலிபோலுங்கரடிபோலும் ...
அடைவானபெரும்பன்றிபோலுநிற்கும் ...
பேதையேபேய்போலும்பூதம்போலும் ...
பிடித்திழுத்துக்கடிப்பதுபோற்செய்யுமாடன் ... (உஎ)

மாடனைத்தானுருவேற்றிவைத்துநீயும் ...
மைந்தனேபூசைசெய்தெதிரியில்லில் ...
தாடனமாய்க்கலசமதையுடைத்தபோது ...
தட்டழிந்தேயவன்குலமுநாசமாகும் ...
வீட்டேவ்வியாதியிலேயழுந்துவார்கள் ... ...
விதம்விதமாய்மாடுகண்களுயிருஞ்சேதம் ...
ஈடலையத்திரவியமுமழிந்துபோகு ...
மினியவேளாண்மைமுதனாசமாமே ... (உஅ)

ஆமேதானெதிரினின்றவேளையெல்லாம் ...
அடைவானகாரியத்திகட்டிற்கீறி ... ...

வாமேதானேங்காயமரைத்துப்பூசி ... *
வளமானகலசமதில்தாக்கிப்போடு ... *
நீமேதான்சத்துருக்கள்வணங்கிவந்தால் ... *
திறமாகத்தானெடுத்துப்பாலிற்போடு ... *
காமேதானேடுசெறசலத்திற்போடு ... ... *
கலமாகநிவர்த்தியாய்ப்போகும்பாரே ... (உக)

கள்ளனைப்பிடிக்க

பாரப்பாநிலவாகைமலைகள்தோறும் ... ... *
பண்பாகத்தானிருக்குமறிந்துபாரு ... *
வாரப்பாவதினுடையவிரையைத்தானும் ... *
வளமாகப்பத்துபலமெடுத்துவந்து ... ...*
சீரப்பாதலைமஞ்சக்கொடியுமாவும் ... *
சிறப்பாகமூப்பூவும்விராகன்கூட்டிச் ... *
சேரப்பாவில்லேதட்டியுலரப்போடு ... ... *
திறமாகவுலர்த்தியதைத்தயிலம்வாங்கே ... (கம)

வாங்கியேயாள்காட்டிமுட்டைதன்னை ... *
வளமானசிற்றண்டத்தயிலம்போலே... ... *
தாங்கியேவாக்கியதைத்தயிலநேரே ... ... *
தயவாகத்தானெடுத்துச்சிமிழில்வைத்து... ... *
ஓங்கியேகளவுமுதற்சூன்யம்யாவு ... ... ... *
மூற்றுப்பார்தோற்றுமடாகள்ளமெல்லாம் ... *
நீங்கியேயதுகண்டுபிடித்துக்கொண்டு... ... ... *
நினைவாகக்குருபாதம்பணிவாய்தானே ... (கக)

குறிசொல்ல

தானேதான்குறிசொல்லும்விவரங்கேளு ... *
தயவாகப்பச்சையென்றபுழுகுகோஷ்டம் ... *
மானேதான்பச்சையென்றபூரத்தோடு ... *
மைந்தனேசந்தனமுஞ்சமனாய்ச்சேர்த்து... ... *
மானேதான்சலம்விட்டுமைபோலரட்டிப் ... ... *
பண்பாகக்கைதனிலேபூசிப்பின்னே ... *
வீணேதான்போகாமல்திரிகோணமிட்டு ... ... *
விதமானஸ்ரீங்கார முள்ளேகாட்டே... ... (கஉ)

காட்டியேமந்திரத்தைச் சொல்லக்கேளு ... *
கலமாகத்தான்செபிக்கமூன்றுகாலம் ... ... *
ஓட்டியேஓம்ஸ்மோபகவதேஓம் ... ... *
உகரமாகாளிசாமுண்டியாயி ... ... ... *
நீட்டியேவயிரவிசாம்பவியோங்காரி ... ... *
நியமமகாசத்திமாமகாவென்றே ... *

...டியேலட்சமூட்டணுபிரத்தெட் ... ... ❀
டன்மாகத்தான்செபிக்கச்சித்தியாமே... ... (௬௩)

...வருமளவு மூன்றுகாலஞ் ... ... ❀
சிறப்பாகத்தலைமுழுகித் தியானமோது ... ❀
மத்தியாயொருபொழுது அமுதுகொள்ளு ❀
மாங்காகமுன்னெடுக்குங் கவளந்தன்னை ... ❀
நத்தியேமுன்னிறப்பின் மேலேவைத்து ... ❀
நலமாகவேஷ்டியிலே படுக்கவேணும் .. ❀
வெற்றியாய்வஸ்துடனே சுத்திவைத்து ... ❀
விதமானமுதற்பூசை செய்குவாயே ... (௬௪)

செய்யவேமண்டலத்தில் சித்தியாச்சு... ... ❀
செய்தொ... ... ❀
மையவேமுன்... ... ❀
பண்பாகநினைத்ததெல்லாஞ் சொலலும்பாரு ... ❀
ஐயனேபுகையதுவுங் குடிக்கலாகா ... ... ❀
தடைக்காயும்வெள்ளிலையு மிருந்துபோடு ... ❀
மையவேகன்னத்திற் கையைவைத்து ... ... ❀
நடந்தவொருசேதியெல்லாஞ் சொல்லுவாயே (௬௫)

சொல்லவேநின்றதொரு வேங்கைக்கட்டை ... ❀
சோபிதமாய்ச்செய்தபின்பு சொல்லக்கேளு ... ❀
வெல்லவேயோணன்தோ லுரித்துக்கட்டி ... ❀
விதமானவேதனச்சக் கரத்தைக்கீறி ... ... ❀
நல்லவேசலாகையிற் சக்கரத்தைச்சுற்றி ... ❀
நாயகனேயுட்பதித்துக் கட்டித்திரு ... ... ❀
மல்லவேயடித்திடவேயெதிரியெல்லா... ... ❀
மதிமயங்கிவாய்புலம்பப்பகருவேனே... ... (௬௬)

சொக்கு...

பகருவேன்பொ... ... ❀
பாங்கானசெ...யாங்கி ... ❀
திகழவேயப்பையுடமூலத்தோடு ... ... ❀
சிறப்பானகிலப்பனையுந்தாளிவேரும்... ... ❀
புகழவேயெத்திப்பேபால்வேரும் ... ... ❀
பொலிவானகுப்பையுடமேனிவேரும்... ... ❀
அகழவேனோவேர்சமுற்சிவேரும்... ... ... ❀
அப்பனேயூமத்தம்வித்துஞ்சேரோ ... (௬௭)

சேரப்பாதலைமஞ்சங்கொடியுங்கூட்ச்... ... ❀
செயலானமாதர்வியாய்ச்சிலைநட்டி ... ❀

பாரப்பாபித்தனுடசாம்பல்மண்ணுடை...
ஊங்கானவூமைமண்டைப்பொடியுஞ்சோத்து
திரப்பாவிதுவெல்லாஞ்சமனுய்க்கூட்டித்
திறமாகப்பொடிசெய்துவைத்துக்கொண்டு
கூரப்பாபேயத்திப்பேயால்பாலும்
கூடவேதான்சேர்த்துப்பொடித்திடாயே... (௩௮)

பொடியெடுத்துத்தூவிவிட்டாற்சகலபேரும்
பொறிகலங்கிமதிமயங்கிக்கிடப்பார்பாரு
மடிபிடித்துத்தான்புரட்டிப்பொருள்கொண்டாலு
மங்கையரைப்புணர்ந்தாலுமறியிராது...
தடியெடுத்தேயடித்தாலுநினைவிராது
தயவாகச்சவமங்கேகெளிக்குமட்டும்
[illegible]
[illegible]தானே (௩௯)

விந்துஸ்தம்பனம்.

தானேவிட்டுஇன்னமொன்றுசொல்லக்கேளு
துலக்கமுள்ளபாளைவித்தெடுத்துவந்து
பாளையென்றவித்துதானிறுக்கிவைக்கும்
பண்பானபூமிசக்கரையின்மூலம்
காளையென்றபூனைபுடகாவிவித்து...
கனிவாகவகைவகைக்குவிராகன்ரண்டு
ஆளவேயாவின்பால்தன்னலாட்டி
யடைவாகப்பன்னிரண்டுநாள்தான்கொள்ளே... (௪௰)

கொள்ளவேயந்திசந்திகொண்டபோது
கோடிபெண்ணையணைந்தாலுஞ்சழிந்திடாது
தள்ளவேம[illegible]வுஞ்சொல்லக்கேளு
[illegible]ட்டும
[illegible]
விதமாகமவலும்[illegible]று
அள்ளவேபோகருடகடாட்சத்[illegible]
அடைவாகப்புலிப்பாணிவிளம்பினேனே ... (௪௧)

வசியம்.

விளம்பியேயின்னமொன்றுசொல்லக்கேளு
விதமானசூரியனார் காந்திப்பூவும்
தளும்பவேசெங்கழுநீர்ப்பூவினோடு
தயவானமுல்லைப்பூமாம்பூகூட்டி
குளம்பவேகோழியாவாரைப்பூவுங்
கொடிதானவெள்ளைக்காவளையின்பூவும்

Best copy available

கிளம்பவேசெவ்வலரிப்பூவுங்கூட்டிக்
கெணிதமுடன்கரிப்பாஞ்சாற்கூட ச்சேர்த்தே (௪௨)

[illegible]ப்பாபூவையெல்லாஞ்சாற்பிழிந்து
சிறப்பாகவோரொடையாயொன்றில்வாரு
வார்த்தய்யாகொம்புக்தேன்கூடச்சேர்த்து
பண்பானகலவத்திலரைக்கும்போது
கூர்த்தப்பாவெண்ணுடையமதுவுங்கூட்டிக்
குணமானகொடு[illegible]ங்கூட்டியாட்டு
கோர்த்தப்பாபுழுகு [illegible]
கொடிதாகவகை [illegible])

காலானவினையெல்லாமறைத்துமைபோல்
கட்டாகச்சிமிழதனிலடைத்துக்கொண்டு
பாலானமயானமதில்தான்புதைத்து
பண்பாகமூன்றுநாள்மோகினியையோது
சேலாகமுன்சொன்னமந்திரந்தான்
செப்புவாய்தினமொன்றுக்காயிரந்தான்
வாலாயமோகினியைப்பூசைசெய்து-
வளமாகத்திலகமிடவசியம்பாரோ- (௪௪)

வாரடாவையகத்துமாதரெல்லாம்
வார்த்தவுடன்மதிமயங்கிமுறையுங்கெட்டுச்
சேரடாவென்பாருக்காலில்வந்து
சிறப்பாகவிழுவாரும்வணங்குவாரும்
கூரடாகுலமழிந்துவலதுகெட்டுக்
குடிகெடுத்தகாமவெறிகொண்டுபின்னே-
திரடாபொருட்[illegible]கொடுப்பார்வேணமட்டும்-
திறமானவ[illegible] (௪௫)

திண்ணந்தான்கற்பமொன்றுசொல்லக்கேளு-
திறமானவிழுதியிலேகிழங்குமுண்டு...
வண்ணந்தானதையறிந்தெடுத்துக்கொண்டு...
வளமாகக்கொண்டுவரமண்டலந்தான்
நண்ணந்தான்காயசித்தியாகும்பாரு
நலமானவெள்ளறுகிந்தவிதம்பாரு
வண்ணந்தான்வேரில்லாக்கொத்தானுக்கு...
வன்பாகவதினேரோகிழங்குண்டாமே (௪௬)

ஆகுமேகாயசித்திமண்டலத்தில்...
அப்பனேயாகுமடாகண்டுபாரு

Best copy available

போகுமேநோய்களெலாமகன்றுபோகும் ... ...
பொன்னுலகிற்றேவரெலாம்வசியமர்வார்...
வாகுமேஜெகவசியமாகும்யாரு... ... ...
வளமானசித்தரெலாங்கண்ணில்தோற்றும்...
நாகுமேபோகருடகடாட்சத்தாலே ... ... *
நலமாகப்புலிப்பாணிபாடினேனே ... (சஎ)

பாடினேனின்னமொன்றுசொல்லக்கேளு ... ... *
பண்பானகாயசித்திகளுக்குமெ[illegible] ... ... *
ஆடினேன்மலைதோ[illegible] ... ... *
[illegible]ந்தா ... *
[illegible]புமாறும் ... ... *
[illegible]வயததுவும்வாலையாவாய்... ... *
நாடியேபோகருடகடாட்சத்தாலே ... ... *
நலமாகப்புலிப்பாணிசொன்னேனையாரே ... (சஅ)

இரசபற்பம்,

பாரப்பாரசபற்பஞ்சொல்லக்கேளு ... ... *
பண்பானசுத்திசெய்தரசத்தையப்பா ... ... *
சேரப்பாகுழியம்மிதன்னிற்போட்டு ... ... *
சிறப்பானவிடத்தலைபினிலைதான்வாங்கிக் ... ... *
கூறப்பாவாயிலிட்டுமென்றுமென்று ... ... *
கூசாமலுமிழ்நீரைவிட்டுஆட்டு ... ... *
தீரப்பாகல்சாமமரைத்தெடுத்துத்... ... ... *
திறமாகவில்லைசெய்துரவியில்போடே ... (சகூ)

போடப்பாவிடத்தலைமைக்கவசங்கட்டிப் ... *
பொங்கமுடனோட்டில்வைத்துச்சீலைசெய்து ... *
[illegible]துஞ் ... *
[illegible]ண்டு... ... *
[illegible]லா... ... *
மிதமாகப்பணவெடைதானென்றேயாகும்... ... *
காட்டப்பாயனேயினுட்கருப்புக்கட்டி... ... *
நலமானபசுவின்வெண்ணெய்தேனுமாமே... (ருய)

ஆமென்றேயாறுநாளிரண்டுவேளை ... ... *
அப்பனேகொண்டவுடனெரிவுகாணும் ... *
வாமென்றவாவின்பால்நெய்யுமாகும் ... ... *
வளமானசீனியுடனிளநீராகும் ... ... *
தாமென்குளிர்ந்தநீர்வாருவாரு ... ... ... *
தயவாகவிஞ்சுமூவாறுக்கும் ... .. *
போமென்றபத்தியந்தானீரரசப்பா ... ... *
பொங்கமுடன்கொண்டபின்புலியாநிபோமே (ருக)

Best copy available

### வசியமூலிகை.

போமடாமூலியொன்றுசொல்லக்கேளு...
பொங்கமுடன்மிளகுசாரணையின்மூலம்
ஆமடாவெள்ளியிலேகாப்புக்கட்டி
ஆடைவாகப்பொங்கலிட்டுப்பலிகொடுத்து...
தாமடாசத்தியில்தானடைத்துக்கொண்டு ..
தயவாகவணைந்திடவேபலனைப்பாரு...
வாமடாபெண்களெல்லாம்வசியமாவார்
வந்தபெண்கள்தான்தியங்கிமயங்குவாரே... (௫௨)

### புருஷவசியம்,

மயங்குவார்புருஷரெலாம்வசியமாவார்
மைந்தனேயூமத்தைப்பொன்னாங்கண்ணி
தியங்குவார்செம்முள்ளிசிவந்தசஞ்சா...
திறமானசெங்குவளைப்பொன்னுவாரை
கயங்குவார்புழுகுகாராமையோடு...
கரியகோரோசினைபுல்லாமணக்கு...
வயங்குமிம்மூலியெல்லாஞ்சாறுவாங்கி...
வளமாகச்சரக்கெல்லாம்விராகனென்றே... (௫௩)

ஒன்றானமூலிசெந்நாயுருவிமூலம்
உத்தமனேவகைவகைக்குவிராகன்சாறு
பன்றானகுழியம்மிதன்னிலிட்டுப்
பண்பாகமைபோலேயரைக்கும்போது
கன்றுதகொம்புத்தேன்காராவெண்ணெய்...
கருவெள்ளைசிற்றண்டமுடைத்துவிட்டு
நன்றாகச்சிமிழகனிலெடுத்துவைத்து
நாயகியாள்திலகமிடவசியமாமே... (௫௪)

வசியமப்பாபுருஷரெல்லாம்வணங்குவார்கள்
வளமாகக்கேட்டதெல்லாமீவார்பாரு
உசிதமாய்ச்சேர்ந்தோர்கள்பிரியார்பாரு...
உத்தமனேயவள்வாசல்காத்துநிற்பார்
அசியமாய்க்காணாட்டால்மயங்குவாரே
அழுதுநிற்பாள்சிணுங்குவாளையோவென்பார்
நிசிதமாயிருந்தபெண்ணும்ரதியேயாகும்
நிலங்கண்டாலும்மோகிப்பார்கண்டியாரே ... (௫௫)

### பல்விழுதல்,

பாரடாவுக்காலைப்பிடித்துவந்து...
யாவியென்றசத்துருகம்பலத்தைவாங்கி...

சேரடா வதன்வர் பிற்செலுத்திப்போடு ... கந்தி
செம்மையாய்க் கருக்கூட்டிப் பெருநாட்டி ... ... *
வீரடா பாதையிலே தலைமேலாக ... ... *
விதமான தலைவாசல் தன்னில் தாக்குச் *
சீரடா மண்டலத்திற் பறகளெல்லாஞ் ... ...*
சிதரியே விழுந்துவிடுந் திண்ணந்தானே ... (௫௬)

கண்கெடுதல்;

திண்ணமாயின்னமொன்று சொல்லக்கேளு ... *
திறமான நீரட்டை யரசன்பாலும் ... ... *
வண்ணமாய்ச் சீலையிலே திரியதாக்கி ... ...*
வஞ்சகமாய்ச் சத்துருவின் விளக்கிற்போடு .. *
நன்னயமாய்த் திரியெரிய வெதிரிகண்ணும் ... *
நலமான திஷ்டியது மறைந்துபோகும் ... *
கிண்ணயமாய் நாளெட்டு அந்திக்காலம் ... ...*
கிளைவாகத் தடனெரிக்கக் குருடுமாமே ... (௫௭)

வியாதியுண்டாக்குதல்;

ஆமடா மூன்றுறைப் பையாய்வாங்கி ... ... *
யப்பனே யெதிரி நீர்மலமிரண்டும் ... ... *
வீமடா அதிர்செலுத்திப் பஞ்சுவெட்டும் ... ... *
விதமான நரம்பதினாலிறுக்கிக்கட்டி... ... ...*
தாமடா ஓம் மோயகலதிகாளி... ... ... *
தயவாக யோகினி சுவாகாவென்று... ... ... *
வாமடா லட்சுருவோதச்சித்தி... ... .. *
வளமாகப் புத்திகெட்டு வோதமாமே... ... (௫௮)

ஓதவே யின்னமொன்று சொல்லக்கேளு ... ... *
ஒளிவான கருநாபி பச்சைநாபி... ... ... *
வாதடா ஊர்தனிலே காற்றுவாட்ட... ... *
வளமாக வெருவடுக்கிப் புடத்தைப்போடு ... *
நாதடா புகைபட்ட மனிதரெல்லாம் ... ... *
நடுநடுங்கிக் காய்ச்சலால் வியாதிகொள்வார் ... *
ஆதடா அவ்வூரில் நீதான் சென்றே ... ... *
பவிழ்தத்தைத் தான் கொடுத்துத் தீர்ப்பயேனென்னே ()

தீர்ப்பதற்கு நீலிவேர் சிறுகீரைவேரும் ... ... *
திறமாக மிளகிட்டுக் கியாழம் வைத்து ... ... *
காப்பதுதான் பஸ்பமென்று விபூதிமோட்டுக்... ... *
கருவாகத்தான் கொடுக்க மூன்றுவேளை ... *
சேர்ப்பதடா மூவிரண்டு மொருவர்காணச்... ... *
செய்யாதே பராஷாணமாற்றென்பார்கள் ... ... *

ஆர்ப்பாகச்சொன்னபணங்கையில்வாங்கு... ...
அன்பாகவின்னமொன்றுசொல்லக்கேளே... (௯௰)

ளடாகள்ளிச்சாற்கார்த்திகையின்மூலம்... ... ...
...டன்பாஷாணத்துரிசுசேர்த்து... ... ...
பாளடாநேர்வாளங்கறுத்தகாபி... ... ...
பணபாகவிதுவெல்லாபிடித்துத்தோண்டி ... ...
வீளடாகக்கலதசீலேபிலேகட்டி ... ...
விதமானகழுத்தளவுதண்ணீருக்குள் ... ...
ஆளடாதெரியாமலகல்லைக்கட்டி ... ...
அடைவாகவுனைக்கிணற்றில்வைத்திடாயே ... (௯௧)

வைத்தவுடனீர்குடித்தபேர்களெல்லாம் ... ...
வாங்கியும்பேதியுமாய்மயங்குவார்கள் ...
செத்தவுடனவ்வூரிலநீயேசென்று ... ...
செயலானதேவதைகணிறுத்தவேண்டும் ...
ஒத்தவுடனிறுத்திவைப்போமூருள்ளோரே ...
வுத்தமனேபொன்கொடுப்பதின்னதென்று ...
நத்தவுடனதையெடுத்தெறிந்துபோடு... ...
நலமானகிணற்றுநீரிறைக்கச்சொல்லே ... (௯௨)

சொன்னபின்புகணபதிக்குவீடுதோறுஞ் ... ...
சொகுசாகநூறுகுடஞ்ஜலத்தைவாரு ...
நன்னயமாய்நீவிவேரிடித்துத்தோண்டி... ... ...
நலமாகக்கிணற்றிலபியாமற்போடு ... ...
இன்னபடிவிழுகியினைத்தியானித்தேதா ... ...
னெல்லார்க்குநீகொடுக்கத்தெளிந்துபோகும் ...
அன்னபடியூரெல்லாம் பொங்கலிட்டு... ... ...
அடைவாகக்கடாவெட்டத்திருமென்னே ... (௯௩)

துரிசுசுண்ணம்,

திருமேதுரிசுக்குவேணமட்டுங் ... ...
திறமாகவொருகட்டிவாங்கிவந்து ... ...
வீருமேகலசமதிற்சுண்ணக்கல்லே ... ... ...
விதமாகக்காற்கலசநாள்ளேயோட்டு ... ...
நீருமேகட்டிதன்னைமேலேவைத்து ... ...
நிச்சயமாய்க்காற்கலசங்கல்லைப்போட்டு ...
சீருமேபாஷாணமிடிச்சத்தண்ணீர்.. ... ...
சிறப்பாகத்தான்தெளிப்பாய்சிறுகத்தானே ... (௯௪)

தானென்றகலசமதிலோடுமூடித் ... ... ...
தயவாகமண்சீலேவலுவாய்ச்செய்து ... ...
தேனென்றாண்டுமுழக்குழியைவெட்டிச் ...
சிறப்பானயானைலத்தி கழுதைலத்தி ... ...

காரனென்றகொடிக்கள்ளியிறபோலே ... ... *
பண்பாகக்கொண்டுவந்துமூன்றுநேரோ ...
காரனென்றகுழியாதிகலந்துகொட்டி... ..
கனிவாகஇருலத்திக்கலந்துவையே ... ..

கையப்பாகலசத்தையதின்மேலேநீ ... ... *
வகையாகயிருலத்திக்கலந்துகொட்டி ... ... *
செய்யப்பாகள்ளியுடன் கலந்தலத்தி... ... *
சிறப்பாகக்குழிநிறையக் கொட்டிப்போடு... ... *
பையப்பாமண்போட்டு மூடிப்போடு ... ... ...*
பண்ணானமண்டலந்தான்கழிந்தபின்பு... ... *
கையப்பாஎடுத்ததனைத்திறந்துநீதான் ... *
கருவாகக்காற்றில்லாவிடத்திலவைத்தே ... (௬௬)

வைத்தகட்டிதனையெடுத்துப்பூரச்சுண்ணக்கல் ... *
வளமாகப்பாஷாணச்சாறுவிட்டாட்டிச் ... ...*
செத்தபின்பதையெடுத்துத்திறமாய்மூடிச்... ... *
செம்மையாய்மண்சீலைவலுவாய்ச்செய்து ... ..*
பைத்தபின்புகுக்குடத்திற்சுண்ணமாகும்.* ... *
பண்பானவதையெடுத்துக்கவசம்வாங்கி ... ... *
நைத்தபின்புநீகானில்வைத்துமைந்தா ... *
நாயகனேகாற்றுடாவிடத்திலவையே ... (௬௭)

வைத்தபின்பெடுத்துப்பார் துரிசுசுண்ணம், வகையாகப்பொருமிய து சுண்ணும்பாகும், செத்தபின்புசரக்கெல்லா மிதனுல்நீறும், செயமாகுமிச்சுண்ணம் ரசத்திற்போடு, நைத்தபின்புமிழ்நீரால் மத்தித்தேதான்-நலமாகரவியில்வைக்கஇறுகும்பாரு, உய்த்துநீயுருக்கிடவேவெளியாகுள்ம் - உற்றாறுதைப்பாருகண்டுபாரோ ... ... ... (௬௮)

வீரச்சுண்ணம்.

பாரப்பாசாரமிட்டுவீரமோடு - பண்பாகக்காரமிட்டுப் பூரங்கூட்டிச், சேரப்பாதுரிசுசுண்ணுஞ் செயநீர்தானுஞ் - சிறப்பாகச்சரக்குகளையரைத்துப்போடு, வீரப்பாசரக்குகளுஞ்சுண்ணமாகும்- விதமானசரக்குகளுஞ்செந்தூரிக்கும், நீரப்பாதனித்தனியே வேதையாகும் - திறமானசெயநீரின்செய்கைதானே ... ... ... (௬௯)

தானென்ற வீரத்தைக்கலவத்திட்டுத் - தயவாக இலைக்கள்ளியிலைச்சாற்விட்டு, கானென்றேயரைத்தவுடன்மூசுறுமூட்டை - கனிவாகத்தான்பிழிந்தரைத்துப்போடு, கோனென்றவில்லைதட்டி புடம்போடு - கொடிதானசிற்றண்டங்கருத்தான்மஞ்சள், தேனென்றகருத்தட்வீக் காயவைத்துத் - திறமானகள்ளியுடசாம்பல்வாரோ ... ... (௭0)

வாரட்டாவைத்தெரிக்கும் வகையைக்கேளு - வளமானநாழிகைதானிரண்டாம்பாரு, சீரட்டாகமலம்போலெரிக்கசுண்ணம் - செயமாகவாற

...ட்டுத்துக்கொண்டு, பாரடாரசஞ்சேர்த்தேயுருக்கவெள்ளி - பண்
...ணசரக்கெல்லாம்பற்பமாகும், சிரடாமுப்பூவைச்சேர்த்துக்கொள்ளத்
...மடாநவலோகம்வேதையாமே ... ... ...(எக)

வங்கவெட்டை.

ஆமடாஉருவியுப்புமேனியுப்பு - அடைவானவுமிழ்நீரி தன்னாலாட்டி, தாமடாகருவங்கக் கட்டிக்கப்பா, தயவாகக்கவசமிட்டு மண்சீலைசெய்து, வாமடாகுக்குடத்திலவங்கவெட்டை - வளமாகத்தங்கமொன்றுலிங்கமொன்று, காமடாவுருக்கியதைப்பின்னும்பாரு, கருவாகச்செம்பொன்றுவெள்ளிமூன்றே ... ... ... ... (எஉ)

மூன்றுடனேதங்கமொன்று தகடுதட்டி - முன்குருவில்விராகனெடையிதிலேசேர்த்து - ஏன்றேநீகொடுத்திடவேமாற்றேழாகு - மிதமாகச் செந்தூரஞ்செய்தாற்சேரு, நான்றதோர்நவலோகவேதையாகும் - நாலாறுமாற்றுகுங்கண்டுபாரு, வான்றெழுஞ்சீர்ப் போகருட்கடாட்சத்தாலே-வழுத்தினேன்புலிப்பாணிவிளங்கத்தானே ... (எங)

விளங்கவேசிப்பியுடசுண்ணந்தன்னில் - விதமானவெண்காரம்வைத்தெரித்து, துளங்கவேயதையெடுத் தமிழ்நீராலே - சுகமாகத்தானரைத்துக்காரியத்தில், புளங்கவேகவசமிட்டுச்சிப்பிச்சுண்ணம், புகழுவேன்கீழ்மேலும்வைத்துமூடி, அளங்கவேயோட்டில்வைத்துச்சீலைசெய்து அடைவாகப்புடமிரண்டில் வெட்டையாமே ... ... (எச)

ஆமப்பாநாழிகைதானிரண்டாம்பாரு, அடைவாகமுன்வெட்டைப்படியேசெய்நீ, வாமப்பாவங்கவெட்டைதங்கவெட்டை - வளமானலிங்கத்தின்கட்டுசேர்த்து, தாமப்பாரசங்கெந்திகூட்டியேதான் - தயவாகச் செந்தூரஞ்செய்துபாரு, நாமப்பாஎன்னசொல்வோம் வேதமார்க்கம்-நவலோகமெல்லாமுந் தங்கமாமே ... ... (எரு)

சாரக்கட்டு

தங்கவேதிருகுகள்ளிச் சாம்பல்வாங்கித் - தயவாகவீரேழுபலந்தானப்பா, பங்கமிலாச்சிப்பிசுண்ணம் மீரேழாகும், பாங்கானவெடியுப்பு மீரேழாகும், அங்கமாய்ச்சாம்பலது கீழேழாகும், அடைவானசிப்பியது கீழேழாகும், சங்கரமாயுப்பதுவுங் கீழேழாகுஞ், சார்வாகவடுக்கடுக்காயதனைவையே ... ... ... ... (எகூ)

வையப்பாசாரமது பலந்தானரண்டு - வளமாகவும்பிட்டு மூன்போல...து, வையவேமண்சீலை யேழுசெய்து, பாங்கானதீபமொருசாமமப்பா, கைய...மது சாமமொன்று - கருதரியகடாக்கினிசாமமரண்டு, உய்யவேயாறவிட் டெடுத்துப்பாரு உத்தமனேதந்தம்போற் கட்டுந்தானே ... ... ... ... ... (எஎ)

தானடாகாகமது விராகன்பத்து - தயவாகவுருக்கையிலே சாமரண்டு. வேனடாகொடுத்திடவே நாகங்கட்டும் - விதமாகச்செம்பிலே பத்

துக்கொன்று, கோணபூரவயசதாவுமெட்டதாகும் - குணமாகரசம் சேர்த்துமைந்தா. மானடாசெந்தூரஞ்செய்தாயானால் - மைந்தனே லோகம்வேதையாமே ... ... ... ... ... (எஅ)

சிறுகண்ணுகச்செந்தூரம்

வேதையிலே யின்னமொரு போக்கைக்கேளு - வீறானசிறியகண் ணுகமப்பா, போதையிலேகருவங்கம்ரசமுங்கூட்டப், பொங்குமுடன்சவுரி யப்பாவிந்தநாலும் - ஆதையிலேசமனையாய்க்கூட்டிநீயு- மன்பாக ப்பனங்கள்ளிற்சாமம்நாலு; நீதையிலேபொற்கையான் சாமம்நாலு நி றமையுடன்தானரைத்து வில்லைதட்டே ... ... ... (எகூ)

தட்டியேயுலர்ந்தபின்போடுமூடித்- தயவாகச்சீலைசெய்து குக்குட த்திற்போடு - கட்டியேயாறவிட்டெடுத்துப்பாரு - சளங்கமிலாச்செந்தூ ரமென்னசொல்வேன், தொட்டிநீசெம்பதாவுமெழுங்கூட்டித், தொழுது வெள்ளியதாவுந்தான் மூன்றதாகும்சட்டமாய்க்குருவொன்றுதங்கமொன் று-சார்வாகக்கொடுத்தவுடன்வேதையாமே ... ... (அ௰)

தான்கபற்பம்.

ஆகுமேதாளகத்தைச் சுண்ணக்கல்லில்-அப்பனேயமுரிவிட்டுச்சுத் தியேமு - வாகுமேதும்பையிலேச்சாறுபடியொன்று- வளமானசுறுக்கிட் டுக்கட்டியொன்றாய் - தாகுமேசேவல்ரத்தமிதக்கவிட்டுத் - தயவாகரவி தனிலேகாயக்காய-நாகுமேரத்தமெலாங்கட்டியில்துவட்டி- நலமாகக்காரு வைத் தோடுமூடே ... ... ... (அக)

மூடியேமண்சீலைவலுவாய்ச்செய்து. புழப்புடத்திற் பஸ்பமாயிரு க்கும்பாரு - வாடியேக்ஷயமெட்டும்வீஷபாசங்கள் - வளமானசோகை யொடுபித்தப்பாண்டு - ஆடியேகாய்ச்சலென்றவகைகளெல்லாம்- அப்ப னேயெகிடியும் பிரமைதீரும் - நாடியேபோகருடகடாட்சத்தாலே நலு மாகப்புலிப்பாணி பாடினேனே ... ... ... (அஉ)

சிலாசத்துபற்பம்,

பாடினேனுருண்டைசீலையைமாட்டிப் பண்பானசிலாசத்துக்கவசங்கட் டி, நாடியேசீலைசெய்து புடத்தைப்போடு காயகனேபற்பமா யிருக்கும் பாரு, ஆடியேநிச்சயமாமிந்தபற்பம் அடைவாகப்பாலையுடகிழங்குநீரில் சாடியேவெடியுப்புவிராகனென்று சார்வாகப்பற்பமொன்று கொடுக்கப் போமே... ... ... ... ... ... ... (அங)

போமப்பாசெம்பாலையனரத்துமைந்தா பொங்குமுடன் கோளியப் பாவதனில்விட்டு, ஆமப்பாவெள்வங்கம்வேணமட்டும் அன்பாகவுருக்கி யொருசட்டிவைநீ, தாமப்பாசட்டிலவைத்தெருவடுக்கித், தயவாகக்கெ சபுடத்திற்பற்பமாகும், வேமப்பாமேகமதுஇருபத்தொன்றும், விதமாக ப்பணவெடைதான் வெண்ணெய்யாமே... ... ... (அச)

லோகவசியம்,

ஆமையாறீம்ஜயுங்கிலியுமென்றே அடைவாகஸ்ரீம்உடனே சவ்வுங் கூட்டித், தாமையாஇறீம்கிலீம்ஒமென்றுசொல்லித் தான்ஜெபிக்கலட்சத் திற்சித்தியாகும், வாமையாலவறுமையெலா மகன்றுபோகும் வளமான தேவதையுமன்னர்தாமும், நாமையாலோகமெல்லாம்வசியமாகும்நலமாக த்தொழில்களெல்லாஞ்சித்திதானே .. ... ... (அரு)

அஷ்டகர்மம்,

தானென்றதலைமஞ்சங்கொடியுமாவுரு தயவாகத்தான்பூசி யுலரப் போடு, ஊனென்றமுப்பூவும்ரவிமதியின்பீசம் உத்தமனேயுடன்கூட்டித் தயிலம்வாங்கி, ஆனென்ற அஷ்டகர்ம மெட்டெட்டுக்கும் அடைவான தொழில்முறைக்கு மெல்லாமாகும், நானென்றபோகருட கடாட்சத்தா லே நலமானபுலிப்பாணியாடினேனே... ... ... (அசு)

பாடினேன்சிவகிரியில்தண்டாயுதபாணி பாருலகில்பூசித்தோர்சொ ல்லக்கேளு,ஆடினேன்பிரமாவுமீசனப்பா அடைவானபோகருட்கிருபை யப்பா,நாடினேன்சத்தியுகத்தி லிருநூற்றைந்தில்நாயகனேபுலிப்பாணிபூசி த்தேன்பார், நீடினேன்பூசைமடந்தனில்வாழ்ந்து நிலைபெற்றேன் போ கருடவருள்பெற்றேனே ... ... ... (அஎ)

அருளாலேபிரமனுடலபியைத்தள்ளி அடைவாக நாமிருந்தோங்கி ரியில்வாழ்ந்து, நெருளாலேஷட்கோணத்தாலயமுங்கட்டி நெறிவிளங்க ஆண்டவனைநேசித்தேன்பார், பொருளாலேவெகுகோடிசித்துசெய்து பூ சைமடந்தனில்வந்துபோகநாகர் மருளாலேயாவரையுமயக்கியாட்டி மதி மயக்கஞ்செய்யுமென்றார்வேலென்றாரே ... ... ...(அஅ)

மூடமாக்குதல்,

வேலாலேயின்னமொருதொழிலைக்கேளு விதமானகிராணமதுதீண் டும்போது, காலானஎட்டிமரங்காப்புகட்டிக் கருவாகத்தூபமிட்டுவேரை வாங்கி, ஆலானநாகமதுவிடும்போதப்பா அடைவாகவேரொன்று வாங்கி வைநீ, சேலானமற்றவேருருப்போற்செய்து செவ்வையா யுருத்தோறுந் துவாரம்போடே ... ... ... ... ...(அகூ)

போட்டப்பாவிடுவேரைமுனைபோற்சீவிப் பொங்கமுடன்பாவையு டமுனையுங்கொண்டு, ஆட்டப்பாசாவலதுவெள்ளையாக அடைவானநீ ருகேசென்றுநின்று, சாட்டப்பாசேவலதுமோட்டிற்கட்டிச் சார்வாகதத ணணீரிற்கழுத்துமட்டும், நாட்டப்பா அகாரமதுசெபிப்பாய்லட்சம்நலமாக க[illegible]ந்தவுடன் சேவல்சாமே ... ... ... (கூ௰)

சாகுமேசெபிக்குமட்டும்பாவைதன்னைச் சார்பாகக்கைவைத்தசெ பத்தைச்செய்நீ, சேகுமேசெதுக்குமுனைகூறதாகத் திறமான வெந்திரியுட கருவைக்கூட்டி, ஆகுமேதுவாரமெல்லாமுனையேதுட்ட அடைவாகக்கு த்தலாய் மூடமாய்ப்போவான்,நாகுமேசத்துருவும்வணங்கிவந்தால் நாய கனேமுனைபிடுங்கிநீராலாட்டே ... ... ... ...(கூக)

சூடன்-சுண்ணம்.

ஆட்டடாசிப்பியுட்சுண்ணந்தன்னி லடைவாகச்சூடனருகட்டிவைத்து, நாட்டடாமேலுமிந்தச்சுண்ணம்போட்டு நலமாகச்சட்டிவாய்சீலேசெய்து, கூட்டடாகமலமதுநாலுசார்மம் குணமாகவெரித்தவுடன்சுண்ணமாகும், வாட்டடாயிந்தசுண்ணஞ சேற்றிற்போட வளமானசுத்தசலமதின்மேலாமே ... ... ... ... ... (கூஉ)

கெந்தகநீர்.

ஆகுமேகெந்தகந்தான்பலந்தானொந்து அடைவானகுழியம்மிதன்னிற்போட்டு, தாகுமேயெருக்கிலையின்பாலுப்பின்சாறு தயவாகத்தான்பிழிந்து ஜாமம்நாலு, வாகுமேவைத்தமட்டு மரைத்துமைந்தா வளமானவம்மியினில்தானேவைத்து, நாகுமேயுதயத்திற்பார்க்கும்போது நலமாகச்சலமதனுளிருக்கும்பாரே ... ... ... ... (கூ௩)

பாரப்பாசலந்தன்னைப்பதனம்பண்ணு பக்குவமாயிம்முறையாயரைக்கும்போது, வீரப்பாராக்காலம்வைத்துப்பார்க்க விதமானசலமதிலேயிருக்கும்பாரு, தீரப்பாவரைத்தரைத்துச் சலத்தைவாங்கிச் சிவசிவாகுப்பியிலேயடைத்துக்கொண்டு, சாரப்பாலிங்கதனிற்சாறுக்குப்போடத் தயவாகக்கட்டுவதுவலுத்துப்போமே ... ... ... ... (கூ௪)

போமேநீயரைத்தகெந்தியினைவழித்துப் பொங்கமுடன்பீங்கானில்ரவியில்வைக்கத், தீமேநீவெயிற்பட்டுத் தயிலமுண்டாந் திறமாகச்சுருக்கிடவே சரக்கெல்லாங்கட்டும், தாமேநீரசததுக்குத்தாக்கில்மைந்தா தயவுடனே சமமாகவங்கங்கட்டும், நாமேநீபோகருடகடாட்சத்தாலே நலமாகப்புலிப்பாணிபாடினேனே ... ... ... ... (கூ௫)

பாடினேன்ஞானமதுதொண்ணூற்றாறுபண்பாகவயித்தியந்தானைஞ்ஞூறாகும், ஆடினேன்சோதிடந்தான்முந்நூறாகும் அடைவாகவாதையதிலகூடசொன்னேன், கூடினேன்சண்முகத்தின்பூசைமார்க்கம் குணமாகமுப்பதிலேகூறினேன்பார், நாடினேன்மதனநூல் கிருபையாலே நலமானநூற்றெட்டும்பதுவுமாச்சே ... ... ... (கூ௬)

ஆச்சப்பாபலதிரட்டுநூறுமாக அடைவானசிமிழ்வித்தை யிருபத்தஞ்சு, வீச்சப்பாஜாலவித்தையிருநூற்றுள்ளே விரும்பினாற்கண்ணாடிமூகமுமாகும், பேச்சப்பாசாஸ்திரத்தைப் பேணிப்பாரு பேதமில்லைபேதமில்லை நூற்கள்யாவும், வாச்சப்பாபோகருடகடாட்சத்தாலே வளமாகப்புலிப்பாணிவிளம்பினேனே ... ... ... (கூ௭)

வாலைரசம்.

விளம்பினேன்ரசம்வாங்கிக் குகையில்வாரு விதமானகுகையதுவும் மூங்கிற்பூப்போல், சளம்பினேன்சகதணத்தைதைத்துமூடில் தானுமேரசமேறுஞ்சாணிக்குள்ளே, குளம்பியேசாணத்தைக் சலத்திற்போட்டுக்

குணமாகக்களைத்தெடுக்க ரசமுமாகும்,இளம்பியேவாலேரசம்போலேயா குங் இருளையுள்ளபற்பமுதலனைத்துமாமே ... ... .. (௯௮)

• ஆமப்பர்சாஸ்திரத்தைவெளிவிடாதே அவையடக்கம்வெகுமதனம் ஐயானையா, வாமப்பாகாமிகட்டுக்காட்டொணாது வஞ்சகர்க்கும்பொல் லார்க்குஞ்சொல்லொணாது,தாமப்பாதந்தைதாய்குருக்களானோர் தயவாகமாதவொடுசிருக்கவென்னும், நாமப்பாயிவர்களையேகொலைகள்செய்தோர் நாசமாய்நரகத்திலழுந்துவாரே ... ... ... (௯௯)

அழுந்தியேசாஸ்திரத்தைநிஜமென்றெண்ணி யடைவானபெரியோ ரைவணங்கிக்காரு,நழுந்தியேபொய்யொன்றுஞ்சொல்லொணாது நரகினுக்கே யாளாகாதிருப்பாயாகில், கொழுந்துபோலுள்ளொளியைநோக்கிப் பாரு கோபமொன்றுமாகாது குணமேவேணும், செழுந்தருவாம்போகரு டகடாட்சத்தாலே சிறந்தபுலிப்பாணிபலதிரட்டுமுற்றே ... ... (௱)



புலிப்பாணிபலதிரட்டு-முற்றுப்பெற்றது.

ஸ்ரீபரதேவதார்ப்பணமஸ்து.



உ

சிவமயம்.

ஸ்ரீபரதேவதார்ப்பணமஸ்து.

# புலிப்பாணிமுனிவரருளிச்செய்த

## ஜாலத்திரட்டு-௨௱.



காப்பு-பாயிரம்.

சத்தியேதபாபரியே ஞானநாவி ... ... ...
சாம்பவியே மனோமணியே கபாலிரூபி ...
முத்தியே வேதாந்தபரையேயம்பாள் ...
முக்குணமே முச்சுடரே மாயாவீரி ... ...
வெற்றியே மூவருக்கு மருளாய்நின்ற ... ...
வேணியேசாமளையே பொன்னே மின்னே ...
சித்தியேஜாலமிரு நூறும்பாடச்
சின்மயமாங் கணபதிதான் காப்பாம்பாரே (௧)

பாரப்பாஜாலமொடு சல்லியமொட்டியம் - பாங்கானவொட்டியந் தொட்டாவிசித்து - சாரப்பாநொடியானு மொடியான்வித்தை - சார்வரிவகிரிகருணையொட்டாரந்தான் - காரப்பாசித்துலட்சங்கல்சடாவித்தைக் கருவானகககிஷ்கும்பஞ்சபட்சி, வாரப்பாசினிவித்தைமாந்தரீகம் வளமானபடுபட்சி கைவல்யமாமே ... ... ... ...(உ)

ஆமப்பாபோகர்வண்ணன்கேசரியதீதம் அடைவானஅஷ்டகர்மம்விளைதகாருடம்தாமப்பாகண்டகம்லேபனமுஞ்சிப்பிதயவானஎட்சணியுந் தர்க்கசாஸ்திரம், போமப்பாபட்சணிதட்சணியுங்கூடப்புஷ்பரதஞ்சோதிடங்கா வியத்திரேடு, நாமப்பாவயித்தியத்தோடிலக்கணத்தன் நல்லசூடாமணியு மின்னங்கேளே ... .. ... ... (ங)

கேளடாசித்திராருடங்கன்னம் கெணிதமாயமிழ்வித்தை கம்பிசூஸ்திரம், சூளடாசூனியமுந்திறவுகோலுஞ் சுகமானமந்திரமும் நறுக்கிசசலவியம், வாளடாமதனநூற்சாத்திரந்தான் வளமானபெருநூற்சல்லியமதாகும், தாளடாவிருப்பென்ற கட்லையப்பா தயவாகமலேதிகண்டுசொல்லக்காணே ... ... ... ... ... (ச)

காணவேவசித்காத்தியஞ்சல்லியமந்திரம் கருவானகூட்டுடைய கருத்தானப்பா, மாணவேசாலமா நிகண்டுபாவை மலேவளப்பம்பூருவமாங்காணட்த்தோடு, ஊணவேகலேக்கியானம் ரோகைவித்தை உத்தமனேயாகமங்கள் விஸ்வாமித்திரம், தோணவேயின்னம்வெகுநூல்களுண்டுதொழிலானயோகருடவருள்தான்கணே ... ... ... ... (ரு)

காணப்பாவிந்நூலி லொன்றுனுலுங் - கனிவாகச்சித்திசெய்வோனவனேநாதன் - ஊணப்பாபரதவித்துப் பார்த்துப்பார்த்தே - வுத்தமனே சித்திசெய்ய விதியில்லாதார் - காணப்பாசாத்திரத்தைப் பொய்யென்பார்கள் - நலமாகவிதியிருந்தாற் பலிக்கும்பாரு - ஆணப்பாசகசாலக்கூத்துக்கூத்து - ஆரியப்போகிறு ரப்பாகேளே ... ... (சா)

கேளப்பாஞானமொடு பலதிரட்டுவாடை - கெணிதமென்றசோதிடமும் வயித்தியமுங்கூட - வாளப்பாசிதம்பரத்தின்பூசையோடு - வளமானதேவியுட பூசையப்பா - சூளப்பாசண்முகத்தின்பூசைமார்க்கம்-சுகமானசிமிழ்வித்தை கொக்கோகந்தான்-வீளப்பாயோகாருசாலஞ்சாலம்-வெகுசுருக்கீதிருநூலுந் தெளிந்துபாரே ... ... ...(எ)

பாரடாஎன்னூல்தான் கோர்வையாகப்-பார்த்தவர்க்குப் பலனுண்டு சித்தியாகும் - வீரடாபலதிரட்டி லேங்கோலந்தான் - விளம்பினேந்தயிலத்தை யெடுத்துக்கொண்டு - சேரடாதொழின்முறைக் செல்லாஞ்சேருசெயமாகும்வித்தையெலா மென்னசொல்வேன் - கூரட்டாகண்கட்டு வித்தையொன்று - கூறுகிறேனன்றுகக் கேளுகேளே ... (அ)

பாயிரம-முற்றியது.







# கண்கட்டுவித்தை.



கேளேநீயூர்க்குருவி பிடித்துவந்து கெனிதமாய்ப்பானத்தைத்தைத் துப்பின்னே-சூளேநீகால்கழுஞ்சிரூதம்வாரு சுசமாகக்கால்சழஞ்சி வெள்ளைபோடு-வாளேநீவாயைத்தான்தைத்துப்போடு வள்மானசிறுபானைக்குள்ளேபோடு - பாளேநீபோகாமற்படிதான்கள்ளு பாங்காகத்தான்வார்த்திட்டெரித்திடாயே ... ... ... ... (௯)

எரிப்பாயேயொருமாத்துவிறகுகொண்டெட்டொன்றுய்க்கரிக்கியே பதத்தைப்பார்த்து -தெரிப்பாயேஅஸ்கிருதலுரோமந்தள்ளித் தெளிவாகத்தானெடுத்துகல்வத்திட்டுச்-செரிப்பாயேபேய்க்கருப்பன்சாற்றைவிட்டுச் - சேர்த்தரைப்பாய்மையோலேயாகுமட்டும் விரிப்பாயே துணிமேலே பரத்திமைந்தா விதமாகக்காயவிட்டுத்திரியாச்சுற்றே... ... (௰)

சுற்றப்பாஜங்கோலத்தயிலம்வாரு சுறுக்காகச்சிரசோட்டில்மையை வாங்கி - சித்தப்பாதயிலத்திலிழைத்துநன்றாய் சிமிழில்வைத்துஜால்க்காள்பூசைசெய்து, அற்றப்பாமையெடுத்துவித்தையாட அடைவாகச்சொல்லுகிறே னன்றுய்கசேளு, முற்றப்பாபச்சைவைக்கோல்தன்னில்தேய்த்து முன்போடப் பாம்பாகுங்கண்டுபாரே ... ... (௰௧)

மாரடாபுளியிலைக்குக்குளவியாகும் பண்பானவேப்பிலைக்குத்தேன்தேளாகும்-ஈரடாநட்டுவாய்க்காலியாகுஞ் சிறப்பானபலகுருவி சிறகிற்பூசில்-கூரடாஅந்தந்தப்பட்சியாகும் குணமானவோட்டிவிடவிராசனாகும்-வீரடாமண்கிள்ளிப்பூசிஞக்கால்-விதமானகெந்தபொடிவாசந்தானே ...()

தானென்றதும்பியிலேபூசிஞக்கால் தயவாகதும்பியதுநடக்குமாரு - ஊனென்றகழற்சிக்காய்வேணமட்டும் உத்தமனே பூசியதைக் கீழேபோடு, கோனென்றகழற்சிக்காய் மோதிக்கொள்ளுங்கொற்றவனே சிறுசிலைக்குமிந்தப்பாகம் - தேனென்றபோகருடகடாட்சத்தாலே தெளிவாகப் புலிப்பாணிபாடினேனே ... ... ... ... (௰௩)

ஜாலக்காள்பூசை.

பாடினேன்ஜாலக்காள்பூசைமார்க்கம் பண்பானமஞ்சளின் கிழங்கு பாவை-சூடி[illegible]யோலரூமஞ்செய்து சுகமாகக்கொடிமூலமேலே சுற்றி,ஆடியேபூசையப்பாசத்திபூசை அடைவாகச்செய்துபின்தியானமோது தேடியேசாகினிடாகினிஜாலக்காள்தேவிநீராராராராவென்றோதே (௰௪)

ஓதவேமந்திரந்தான்லட்சமோது உன்னிடத்தில்விளையாடியிருப்பார்ன்பாரு- வாதவேபிவளுடையஜாலஞ்ஜாலம் வையகத்தோர்மதிமயங்கியிருப்பார்ப்பா-சூதுதான்சொல்லவில்லைஜாலவித்தை சொன்னபடிதானுமிக்கண்டுபாரு - நாதனார்போகருடகடாட்சத்தாலே நலமாகப்புலிப்பாணிபாடினேனே ... ... ... ... ... (௰௫)

பச்சைப்பாம்பு வித்தை,

பாடினேனின்னமொன்றுசொல்லக்கேளு பண்பான்பச்சையென்றபாம்பைக்கொன்று - ஆடியேயதின்வாயிற்கொட்டைமுத்து அப்பனேபூநாவின்மருத்திக்கொட்டை - கூடவேயடுக்கடுக்காய்செலுத்திப்போடு குணமாகமண்ணிட்டுநீவாரு- மூடியேவித்தெடுத்திந்தப்பாகம் மூன்றுதரம்போட்டுநீயெடுத்துக்கொள்ளே, (௰௬)

கொள்ளப்பாமூன்றுதரங்காய்ச்சமூத்தின்குணமானஎண்ணெயையைவடித்துக்கொண்டு-தெள்ளப்பாமூன்றுதரம்வெடிக்கபஞ்சு தெளிவாகத்தானெடுத்துத்திரியாய்சசெய்து - கள்ளப்பாதிரியெடுத்துவிளக்கிலேற்றிக் கனிவாகவைங்கோலத்தயிலஞ்சாற்றி - அள்ளப்பாவிளக்குதனிலிந்தஎண்ணெய அடைவாகத்தான்வார்த்துத்தீபமேற்றே ... (௰௭)

ஏற்றப்பாராக்காலமனிதர்கூட்டம் இருக்கையிலேபொருத்திவிடுபாம்பாய்த்தோணும் - கூத்தப்பாவெகுபாம்புபச்சைப்பாம்பு கொற்றவனேவெகுபேர்கள்மிரளுவார்கள் - தாத்தப்பாதிரியணைக்க மறைந்துபோகும்சமர்த்துதானென்னசொல்வேனிந்தவித்தை - ஆற்றப்யாபோகருட கடாட்சத்தாலே அடைவாகப்புலிப்பாணிபாடினேனே ... (௰௮)

மூலிகை ஜாலம்:-

பாடினேனின்னமொருஜாலவித்தை பண்பாகச்சொல்லுகிறே னன்றாய்க்கேளு - ஆடியேயிருளனென்றமூலிதன்னை அப்பனேகாப்பிட்டுப்பிடுங்கிவேளா - நாடியேகாதிலேவைக்கும்போது நலமாகவொருபொருளைச்சொல்லிவைத்தால், கூடியேயவ்வண்ணருபமாகுவாய குணமானவதன்பெருமைகூறக்கேளே ... ... ... ... (௨௰)

ஆவாயநீயாணுவாய்பெண்ணுமாவாய்அப்பனேராஜனொடுகுருவுமாவாய், தாவியேசித்தரொன்றமுத்தராவாய் தபோதனர்கள்வேதியர்கள் தாமுமாவாய - வாவியேகுளமாவாய் கிணறுமாவாய் வளமானபாம்பாவாய்பட்சியாவாய்-மேவிநீநினைத்தபடியெல்லாமாவாய் மேதினியிலின்னமொரு புதுமையாமே ... ... ... ... (௨௧)

ஆமப்பாஇச்சாலஞ்சுதுக்குமெத்த ஆரியப்யோகிமூருமைவித்தை - காமப்பாபுண்ணியருக் கெய்தும்பாருகன்மிகளுக்கெந்நாளுங்காணாதப்பா - தாமப்பாஇம்மூலி காய்ந்ததானல் தயிலமிட்டுக்காற்றில் வைககவீரமாகும் - வாமப்பாயோகருடகடாட்சத்தாலே வளமாகப்புலிப்பாணிபாடினேனே... ... ... ... ... (௨௨)

தெய்வஜாலம்

பாடினேனின்னமொன்றுசொல்லக்கேளு பாங்கானசிறுமூன்னைகாப்புகட்டி- ஆடியேயொங்கலிட்டுத்தூபதீபம் அப்பனேபலிகொடுத்துவேளைவாங்கி-கூடியேயொடியாக்கிக்கருச்சிலைதன்னில் குணமாகத்திரியாக்கியைங்கோலத்தால்-வாடியேவிளக்கிட்டுத்தீயந்தன்னை வளமாகஆவினெய்யிலேற்றிடாயே .. ... ... ... ... (௨௩)

ஏற்றியேகோயிலுக்குள்மாளிகைக்குள் இன்பமதாய்த் தானிருக்குமிடத்திலப்பா- பாத்தியேமனுக்களைத்தான்வரவழைத்து பாவொன்றுசொல்லிவாய், மூடுமூன்னே - வாத்தியேதேவரெல்லாங்கண்ணிற்காணும் வையகத்தோர்தான்மயங்கிப்பார்ப்பார்பாரு-சாத்தியேதிரியணைக்க மறையும்பாரு சார்வாகப்போகருட கடாட்சந்தானே... ... ... (௨௪)

சீலைச்குடைபிடிக்க,

தானென்றசருவிழிகாப்புக்கட்டி தயவாகப்பொங்கலுடன்பலியுமிட்டு- தேனென்றதிக்குபங் தனமோரெட்டுஞ் செய்தவுடனைதைவெட்டிக்கிழங்குவாங்கி - கோனென் சோம்னிலேவிராகனென்று குணமாகத்தானுக்கிமுடிந்துக்கொண்டு-வானென்றஆகாசந்தன்னிற்போட வளமாகக்குடைபிடித்துவரும்பாரே ... ... ... ... (௨௫)

எலுமிச்சம்பழவித்தை,

பாரேநீஇன்னமொன்றுசொல்லக்கேளு பாங்காகச்சர்த்தமந்தான்யூணரும்போது-சேரேநீவால்மயிரை வெவ்வேறேவாங்கித் திகழுமோதிரம்போல்வெவ்வேறேசுற்றித், தேரேநீயைங்காயமேலேபூசித் திறமாகத்தங்கத்தைமேலேசுற்றிக்-நீரேநீவலவிரலிலாண்தானப்பா திடமாகஇடவிரலில் பெண்தான்காணே... ... ... ... ... (௨௬)

காணப்பாஎலுமிச்சம்பழத்தைவாங்கிக் கனிவாகவாகாசந் தன்னிற்போடு - மாணப்பாஇடக்கையைக்கீழேமூடு வானிலுள்ளகனியதுவும்விழாதப்பா - தாணப்பாஇடக்கையைநிமிர்த்திக்காட்டத் தான்விழுங்கனியதுதான்கண்டுபாரு - வேணப்பாபோகருடகடாட்சத்தாலே விதமாகப்புலிப்பாணிபாடினேனே ... ... ... ... (௨௭)

நோக்குவித்தைகள்,

பாடினேனின்னமொன்று சொல்லக்கேளு பண்பானகுன்றுமணிதாங்கிமூலம்-நாடிநீகொழிஞ்சியதுபோலேயப்பா-நாட்டிலேமெத்தவுண்டாமப்பாரு-கூடியேயதைச்சுருட்டிமேலேயப்பா குணமாகஆள்பாரங்கல்லைவைக்க - ஆடியேபார்த்திருக்கஅந்தக்கல்தான் அப்புறத்திற்போய்விழுங்கண்டுபாரே ... ... ... ... (௨௮)

பாரடாபிரானைமந்திணம்மோதுபண்பாகக்காப்பிட்டுப் பொங்கலிட்டு - சீரடாபலியிட்டுத்தூபதீபம் செயமாகக்கொடுத்து மிகவேளைவாங்

சி - நீரடாகுளிசமாயாடிக்கொண்டு திறமாகச்சிரசுதனில் வைத்துநீயும், கூரடாபாரமதையேற்றிப்பாரு குணமாகத்தானெடுக்கக்களக்காதன்றே()

கன்க்காதுவுலக்கைமூதல்கட்டிலேயா கனிவானபல்லாக்கின் கொம்பி னோடு-அனக்காதுஇதுகளெலாம் நோக்கும்போதி லப்பனேவாயிலிட்டு நோக்கிப்பாரு - இனக்காதுஆனேயைத்தான்வாலேப்பற்றி இழுத்தாக்கால் பின்வகர்ந்துவரும்நீபாரு-னக்காதுகல்லேத்தானுதைத்தாயானால் நகரும ப்பாபெரும்பாரம் பின்னேத்தானே ... ... ... (௩௰)

தானேதானின்னமொன்றுசொல்லக்கேளு தயவாகச்சவுக்கினுடவா யினுள்ளே - மானேதானிருப்பாணியுள்ளேவிட்டு மைந்தனேமார்பினில் தான்வெள்ளியாணி-தேனேதானுங்கியிலேசெப்பிறுணி தெளிவாகத்தா னடித்தின்னங்கேளு - வானேதான்சலங்கிட்டந்துவெந்தபின்பு வளமாகம துகாளி லெடுத்துக்கொள்ளே ... ... ... (௩௧)

கொள்ளவேகாட்டாற்றுமுன்னேநீயுங் குணமாகத்தானெடுத்துப் பூ சைசெய்து-தெள்ளவேபிரம்பில்வெள்ளிகட்டாய்போடு தெளிவாகவிரும் பதனேமுன்னேபோடு-கள்ளவேசெம்பதுதான்பின்னேபோடு கடிதாகவி வ்வகைநீசெய்துபின்பு - அள்ளியேயைங்கோலக்கருவும்பூசி அடைவாக ஜாலக்கள் தியானமோதே... ... ... ... (௩௨)

ஓகியேலட்சமுரு முடிந்ததானு லொளிவாகஜாலக்காள் பூசைசெய் து - வாதாகப்பிரம்பதனையெடுத்துக்கொண்டு வளமாகப் பாம்பிருக்கும் பெட்டிமேலே-காதியேயன்பாகத்தட்டும்போது-காணுது நாம்யெல்லாங் கண்டுபாரு - தாதியேபிரம்பைத்தான்திருப்பித்தட்டத் தானிருக்கும்பெ ட்டியுள்ளே பாம்புத்தானே ... ... ... (௩௩)

வாத்திய ஜாலம்.

தானேதானின்னமொன்றுசொல்லக்கேளு தயவானபள்ளியர்கள்பூ ரணமானல் - கோனேதானவர்கள்கையி லிரும்பினலே கொற்றவனே வ ளையலதுபோட்டிருப்பார், தேனேதானவர்களேத்தான் தகனம் பண்ணச் சேருகையில்வளையலுடன் வைப்பார்பாரு - மானேதான்காட்டாற்று முன் னேயப்பா வகையாகத்தானெடுத்துவைத்துக்கொள்ளே ... (௩௪)

கொள்ளப்பூபாக்குவெட்டியதனற்செய்து - கொற்றவனேகிராண மதுநீண்டும்மோது- தள்ளப்பாசங்கம்வேர் காப்புக்கட்டித் - தயவாகப் பலிபூசைநடத்தியப்பா, தெள்ளப்பாவட்டவேனா வாங்கிக்கொண்டு- தெ ளிவானவைங்கோலக்கருவும்பூசி - கள்ளப்பாபாக்குவெட்டிதன்னல் வெ ட்டிக்-கனிவாகவதின்பெருமைசொல்லப்பாரோ ... ... (௩௫)

பாரடாமேரிகையுநகமத்தோடு-பண்பானநகாருமூதல் டங்கத்தானு ம்-சேரடாதம்பட்டங்கனகதப்பு- செயலானதவிலோடு தவண்டையப்பா கூரடாதுத்திமல்லாரிதாரை குணமானபம்பையொடுபூரியப்பா சேரடா

சந்திரவாத்தியஞ்சூரியவாத்தியம் - தெளிவானவுடுக்கை முதல்முழங் குந்தானே ... ... ... ... (௩௬)

தானென்றதிடுகுமுட்டி தப்பிேனோடு - தயவர்களின்னம்வெகுவாத் தியங்கள் - கோனென்றவேணைத்தானடுக்கடுக்காய்-கொற்றவனேவெட்டு கையில்முழங்கும்பாரு-தேனென்றவாத்தியத்தின்சாலஞ்சாலம் - தெளி வாகத்குருமுறையால்தெளிந்துசெய்நீ- ஆனென்றயோகருடகடாட்சத்தாக லே-யடைவாகப்புலிப்பாணி பாடினேனே ... ... (௩௭)

எக்காளசாலம்,

பாடியேஇன்னமொருவித்தைசொல்வேன்- பண்பாய்ஆம் ஓம்நமசி வாயமென்று-ஆடியேலட்சமுருசெபித்தாயானால் - அப்பனேஜாலக்கார் பூசைசெய்து-கூடியேநத்தமரம் சூரிவேரைக்- கொண்டுவந்தேயைங்கோ லக்கருவும்பூசி - நாடியேமுந்தியிலேவைத்துநீயும் - நலமாக நீட்டியதை முறுக்குவாயே ... ... ... ... ... ...(௩௮)

முறுக்கையிலே மந்திரத்தைத் தியானமோதி - முனிவாகமண்ணெ டுத்தெதிரேபோடு - இருக்கையிலேயெக்காளந்தாரைசின்னம், எளிதா னகர்னுவும் வாங்காதப்பா, திருக்கையிலேநாகசுரங் கொம்பினேடு- தெ ளிவானமகுடியொடுசெங்காரதம், கருக்கையிலேயிதுகளெலாம் படைக்கு மாரு-கனிவானபோகருட கடாட்சந்தானே... ... ... (௩௯)

அக்கினிஜாலம்,

தானேயாஇன்னமொரு வித்தைசொல்வேன் - தயவாகப்பச்சையெ ன்றதவளைநெய்யில்- மானேயாகலசத்தில் வைத்துக்கொண்டு, மைந்தனே துணியதிலே துவைத்துமைந்தா - வானேயாமண்வெட்டி யமுக்கக்காய்ச் சி, வளமானவுரலின்மேல்வைக்கச்சொல்லித் - தேனேயாஎண்ணெயிலே கையைத்தோய்த்துத், திறமாகத்தானடிப்பாயின்னம்பாரே ...(௪௰)

பாரடாஅனேவோரும் பார்த்திருக்கப், பண்பாகத்துணியதிலே து டைத்துப்போட்டு - தேரடாஎண்ணெயிலே தோய்த்துத்தோய்த்துத்- தெளிவாகத்தானெரிப்பா யனேவோர்பார்க்கச், சீரடாகுண்டதனைக்காய்ச் சச்சொல்லி-சிறப்பாகவாய்தனிலே யிந்தஎண்ணெய் - தீராகிரம்மவிட் டுமிழ்ந்துவிட்டுத் - திறமானகுண்டதனைக்கவிழ்த்துத்தூக்கே (௪௧)

தூக்கப்பாவனேவோரும் பார்க்கும்போது-துணிவாகவைக்கோலில் வைத்துக்கட்டி - வாக்கப்பாவைக்கோலி லெண்ணெய் தோய்த்து-வகை யாகத்தான்கட்டி முன்னேபோடு - போக்கப்பாவைக்கோல்தான் வேகா தப்பா-பொலிவாகத்தானவித்துப்பின்னுங்கேளு - தாக்கப்பாவைக்கோல் மேல் போட்டாயானால், தயவாகத்தான்பிடித்துவேகும்பாரே (௪௨)

பாரடாசங்கிலியைக் காயப்போட்டுப்-பண்பாக நெய்யெடுத்துருக் குவாய்நீ - சீரடாபாதத்திற்றடவிக்கொண்டு-சிறப்பாகவக்கினிமேல்நடக் கவாகும் - கூரடாகைதனிலேதடவிக்கொண்டு - குணமானவக்கினிச் ச

ட்டிதன்னை - விரடாவெடுக்கலாங் கண்டுபாரு விதமான போகருட்கடா
ட்சந்தானே... ... ... ... (௬௩)

## ஜலஸ்தம்பனம்.

தானான இன்னமொருவித்தைகேளு-தயவாகச்சலந்திரட்டுங் கூட்டு
மூலி - வானாசவுலர்த்தியதைத்தூளாய்ச்செய்து - வளமானஜங்கோலத்
தயிலந்தன்னில்-மானாகமைபோலேயரைத்துமைந்தா - மருவுபாதக்குற
டுதன்னிற்பூசிக் - கோனாகத்தண்ணீர்மேல்நடக்கலாகும்- குளங்கிணறே
யல்லாமலாறுகாதே ... ... ... ... (௬௪)

ஆறானவாசனங்கள் தன்னிற்பூசி-யப்பனேசலத்தின்மே லிருக்கலா
கும்-கூறான இந்தவித்தை புதுமைமெத்த - கொற்றவனேயுலகத்தோர்
நாதனென்பார்-தேறான இந்தசாலந்தானாலந் - தேறிநின்றுற்சகலசித்துங்
கைக்குள்ளாகும் - வீறானபோகருட்கடாட்சத்தாலே - விதமாகப்புலிப்
பாணிபாடினேனே ... ... ... ... ... (௬௫)

## ப்ச்சைத்தவளைவித்தை.

பாடினேனின்னமொருவித்தைகேளு, பண்பானதவளையைத்தா னா
ரவங்சவ்விக், கூடியேபிடித்திருக்கும்வேளைபார்த்துக் - கூசாமற்றலையை
வெட்டிப்போட்டு,ஆடியேயரவுடையதலையுங்கூட- அடைவானதவளையுந்
தா னெடுத்துக்கொண்டு, நாடியேமரங்கிரிச்சுப்பட்டைரண்டு- நலமான
வைங்கோலத்தயிலங்கூட்டே ... ... ... ...(௬௬)

கூட்டியேசலாத்தில் வைத்தாக்கைத்துக் - குணமாசவுரவின்கீழ்
வைத்துக்குத்து-நாட்டியேகுத்தையிலே வாய்வுபோகும் - நலமாகவதை
யெடுத்துவைத்துக்கொண்டு-ஆட்டியேஇப்பாகம்நினைத்தபோது- அடை
வாகச்செய்துவிளை யாடியாரு, வாட்டியே யவமானப் பட்டுப்போவார்
வையகத்தோர்தான்பார்த்துநகைப்பார்பாரே ... ... (௬௭)

## சிலைத்திராய.

பாரடாகர்த்தபுந்தான்புணரும்போது - பரிவாகவாண்கழுதைவாலு
ரோமம்-சீரடாபிடுங்கியதைவைத்துக்கொண்டு - சிறப்பானகண்ணிலலா
ப்புற்றுமீதில்-தீரடாகட்டுடைய கொடிதானப்பா- திறமாகக்கிராணத்தில்
காப்புக்கட்டி, கூரிடாபலிபொங்கல் தூபதீபங்கொடுத்து நீ கொடியதனை
ப்பிடுங்கிக்கொள்ளே ... ... ... ... (௬௮)

கொள்ளவேவலையாமாய் சுருட்டிக்கொண்டு - குணமானரோமமுங்
கூடவைத்தே-கெள்ளவேதங்கத்தால் வெள்ளியாலும்- தெளிவாகத்தண்
டினுடமேலேசுற்றி-கள்ளப்பாசுற்றுமுன்னேகருவும்பூசிக்-கனிவாகச்சால
ககாள்பூசைசெய்து-மெள்ளவேவகையதனிலேற்றும்போது- மேன்மையா
ய்ச்சிலைபதுதிராயும்பாரே ... ... ... ... (௬௯)

# புலிப்பாணிபலதிரட்டு.

## தீவட்டிஜாலம்,

பாரப்பாவெட்டுண்டமுண்டந்தன்னைப்-பதித்திருக்குமிடம்பார்த்து வுன்னைவாங்கி- நேரப்பாஇகைப்பூடுபொடித்துப்போடு-நேரானவெங்கோலத்தயிலஞ்சேர்த்து - தீரப்பாதீவட்டிதனில்நனைத்துத்-திறமாகப்பொருத்திவிளக்கெணணெயவாரு- வீரப்பாராக்காலமனிதர்கூடி- விருகவிருக்கையிலேசொல்லக்கேளே... ... ... ... ... (௫௰)

கேளடாதீவட்டிதான்பிடிக்கக்-கேட்டுதடாவனைவோருமுண்டமாவர்-நாளடாகூட்டங்களோடிப்போகும் - நாமென்னசெய்வமென்றுநகைப்பார்பாரு, சூளடாஎன்னவிதியிந்தக்கூத்து- சொல்லலாமென்பார்களனைவோருந்தான், ஆளடாஇந்தசாலந்தான்சாலம்- சித்தனார்யோகருடகடாட்சந்தானே... ... ... ... ... ... (௫௧)

## எட்சணிஜாலம்.

தானானபச்சோந்திப் பிச்சைவாங்கித்- தயவாகத்திசைம்பக்கப்பொடியுங்கூட்டி,மானானமதிமயகருத் தூளுங்கூட்டி-மத்தம்வேர்த்தோலதுவுங்கூடச்சேர்த்து,வானானஐங்கோலத் தயிலத்தாட்டி - வளமாகச்சிமிழதனில்வைத்துக்கொண்டு, கோனானமோகினியைத்தியானஞ்செய்து- குலமானஜாலக்கர்ள்பூசைசெய்யே ... ... ... (௫௨)

செய்யப்பாமாயமோகினி நமகாவென்று - செயலாகத்திலகமிடப்பெண்போல்தோன்றும்-வையப்பாவுலகத்தோர்வாய்வாண்டு-மதிமயங்கிமோகித்து நிற்பார்பாரு, ஐயப்பாரம்பையூர்வசிப்பெண்தானோ - அவைவானகிலோத்தமையோ தெய்வப்பெண்ணோ,கையப்பாபிடிப்பாருங்காலில்வந்து-கனிவாகவீழ்வாருங்கண்டிபாரே ... ... (௫௩)

பாரடாதிலசத்தையழித்தபோது - பண்பானபெண்ணையல்லோகாணோமென்பார்-வீரடா இந்தமங்கையுலகிலுண்டோ - விதமானமேதினியிற்காணலாமோ, தீரடாமனமபதறியழுவார்பாரு - தெய்வமேயென்று சொல்லிமயங்குவார்காண்-நீரடாஇப்பெண்ணைநினைத்தபோதே- நெஞ்சுருகிவேகுதென்றுபுலம்புவாரே ... ... ... (௫௪)

வாரானஇன்னமொரு வித்தையப்பா -விளமானஎட்சணியின்மார்க்கங்கேளு; கூரானஸ்ரீம்இறீம்கிலியுமென்று, குணமானஅவ்வுமுவ்வுமவ்வுஞ்சேரு, வீரானநமசிவயவென்றுநீயும் - விதமாகவுமென்று சொலவிப்பின்னை - சீரானசுகந்தபரிமளஞ்சாதிக்காய் - நிறமானகிராம்புவால்மிளகுதானே ... ... ... ... (௫௫)

மிளகோடுஅடைக்காய்ச்சர்க்கரைசறகண்டு, மிதமில்லாக்கனிவகைகள் பலகாரமன்னம், அளகோடுஇவையெல்லாம் வேண்டுமென்றே - அடைவாகஎட்சணியின் தியானமோது-புளகோடுதொட்டாக்கால்மூலிகைக்குப்-பொங்கமுடன்வெள்ளிநான்காப்புகட்டி நளகோடுஎட்டுநாளந்திசந்தி-நலமாகஎட்சணியின்தியானமோதே... ... ... (௫௬)

# புலிப்பாணிபலதிரட்டு.

ஓதியபின்பொங்கல்பலி தூபதீபம் - ஒளிவாகத்தான்கொடுத்துவேணவாங்கி - ஆதியாமைத்தோலக் கருவும்பூசி-அடைவாகக்கருச்சிலே மேலேசுற்றி-நாதியேதங்கத்தா லடைத்துகொண்டு-நலமாகஎட்டசணியைலட்சமோதி-திதிலாப்பூசைபலி பெலக்கச்செய்து-செயலானயிவையெல்லா மழைப்பாய்யாரே ... ... ... ... (௫௭)

பாரப்பாசபைநடுவே யிருந்துக்கொண்டு பண்பானமூக்காடு போட்டுநீயும், சீரப்பாநீலகண்டித் தியானமோது சீக்கிரத்திற்கொண்டுவருமெட்சணித்தான், கூரப்பாஎல்லார்க்குங் கொடுக்கச்செய்நீ குற்றம்வருமநீயொன்றும் புசிக்கவேண்டாம், நேரப்பாபோகருட கடாட்சத்தாலே நிச்சயமாய்ப்புலிப்பாணி பாடினேனே ... ... (௫௮)

மாம்பழஜாலம்

பாடினேனின்னமொரு வித்தைகேளு பரிவானபேரழிஞ்சிவித்தைவாங்கி, ஆடியேபூத்தயில மாகவாங்கி அன்யாகமாங்கனிதான்கொம்பிலப்பா, சூடியேகனிந்தபழங்கொண்டுவந்து சுகமாகப்பிழிந்ததனைத் தோலை நீக்கிக், கூடியேயைங்கோலக் கருவுங்கூட்டிக் குணமான தயிலத்திலூறப்போடே... ... ... ... ... (௫௯)

போட்டப்பாவொருநாள்தான் கடந்துவாங்கிப் பொங்குமூட்டனிழலுலர்த்தி வைத்துக்கொண்டு, நாடப்பாசபைதனிலே யிந்தக்கொட்டை நலமாகயாவருக்குங்கண்ணிற்காட்டிச், சாடப்பாகுழிதோண்டி வித்தைநட்டுச் சார்வாகச்சலம்வார்த்துக் கூடைமூடு, சூடப்பாநாலுதரந் தண்ணீர்வாரு சுகமாகநாலுதரந் திறந்துமூடே ... ... (௬௰)

மூட்டவேஇலையாகிக்கொழுந்துமாகி முக்கியமாய்த் தழையாகிப்பூவுமாகித், தேடவேபிஞ்சாகிக் காயுமாகித் தெளிவானகனியாகி யுதிரும்பாரு, ஆட்டவேயனைவருக்குங் கொடுக்கச்செய்நீ அப்பனேநாழிகைதான் மூன்றேமுக்கால், கூடவேயிதற்குள்ளே மர்மமாகிக் குணமானகனியாகி யுதிருந்தானே... ... ... ... ... (௬௧)

இந்திரஜாலம்

தானேதானின்னமொரு ஜாலவித்தை தயவாகச்சொல்லுகிறேனன்றாய்க்கேளு, மானேதான்மாயமென்றபூனையொன்று மைந்தனேபாவையென்ற கிளியொன்று, தேனேதானிரட்டைவா லரணையொன்று தெளிவானதிலகைப்பூடு பூசிப்பந்து, கோனேதான்பேய்ப்பீர்க்கின் விதைதானப்பா குணமாகரண்டுபலம் நிறுத்துப்போடே ... (௬௨)

போடேபுல்லாமணக்கு விதைதானப்பா பொங்குமுட்டனிரண்டுபலம் நிறுத்துப்போடு, ஆடவேயிவையெல்லாநறுக்கியப்பா அடைவானபேய்க்கருப்பஞ் சாற்றிற்போடு, நாட்டவேஜாமமது கடந்துவாங்கி நலமாக நிலந்தனிலே யுலரப்போடு, கூடவேயாதனொயின்பாலைவாங்கிக் குணமாகவொருசாம மூறப்போடே ... ... ... (௬௩)

போட்டப்பா இவையெல்லாம்வாண்டத்திட்டுப் பொங்கமுடன்பூத் தயிலமாகவாங்கி- தேட்டமாயைங்கோலத்தயிலநேரோ தெளிவாகச்சேர்த்துநீ யரைப்பாயப்பா - தாட்டியாயரைக்கையிலே ரசமும்வெண்ணெய் சார்வாகவகைவகைக்குக் கழஞ்சியோடு - வாட்டமிலாமுப்பூவுங்கழஞ்சி போட்டு வளமாகவரைத்தெடுத்துச்சிமிழில்வையே ... (௬௪)

வையப்பாசாலக்காள்பூசைசெய்து வுளமானநீலகண்டி தியானமோது-கையப்பா ஸ்ரீம்றீம் கிலீயும்சவ்வும் கனிந்தஐயும்அவ்வுமுவ்வுமவ்வுங் கூட்டி- ஐயமின்றிரவ்வுடனேகூகூவென்றே யடைவானநீலகண்டி யம்மா வென்று-வையவேலெட்சமுரு செபித்தாயானல் யாங்கான மையதுவுமு யிரதாச்சே ... ... ... ... (௬௫)

ஆச்சப்பாநீலகண்டிபூசைசெய்து அடைவாகமையெடுத் தாடக்கேளு-பாச்சப்பா நூலேணியொன்றுசெய்து பாங்காகமேற்போடப்படியாய் நிற்கும்-வீச்சப்பாமையெடுத்துக்கையில்தேய்த்து விதமானமண்ணையள் ளித்திசையிற்போடு- கூச்சப்பாவெகுபடைகள்வருகுதென்று கூறுவாய் வெகுபடைகள்வரும்பாரே ... ... ... (௬௬)

பாரடாநீலகண்டியம்மாநீயும் பாங்காகநூலேணி பிடித்துக்கொள்ளு சேரடாயென்றுநூலேணிதன்னைச் செயலாகச்சொல்லிநீபோடுபோடு,நீர டயந்தரத்திற்சண்டையாகத் தெளிவாகச்செய்யென்று தியானமோது- கூரடாபடையெல்லாம் போகுதென்று குணமாகத்தானுரைக்கப் போகும்பாரே ... ... ... ... ... (௬௭)

பாரடா நூலேணிமேலே யப்பாபாங்காகவே துபடைகள்போகும்பாரு-சீரடாஎல்லார்க்குங் கண்ணிற்காணுஞ் சிறப்பாகயாவருமே புதுமை யென்பார் கூடாமையெடுத்துத்திலகமிட்டுக்-குணமானநீலகண்டி தியானமோது - ஆரடா அந்தரத்திற்சண்டையாக அடைவாகநீநினைத்துக்குல வச்செய்யே ... ... ... ... (௬௮)

செய்யுமேவானகத்தில்முழக்கமெத்த செயலாகவான்பரிகள் கனைக்கும்பாரு-கையிலேவாளுடனே தண்டைவாங்கிக் கனிவாகமைபூசி வெட்டும்போது-ஐயமின்றிப்பொடிபொடியாய்வெட்டிவீசு ஆள்தலைகள்வருகுதென்பாரறிந்துபாரு - மையிலேகூழ்ப்பாண்டந்தடவிவெட்ட மகத்தான ஆனையுடதலையென்பாரே ... .. ... ... (௬௯)

மாரடாபூசினிக்காய்பூசிவெட்டப் பாங்கானகுதிரையுட் தலையென் பார்கள் காரடாகெச்சக்காய்தன்னிற்பூசிக் கடிதாகத்தான்வெட்டச் சொலக்கேளு - ஆரடாகோடிபடையிறந்ததென்பார் அப்பனேஇந்திரஜாலந் தான்ஜாலம் - நேரடாதலைகளெல்லாமெடுத்துமூடி நிச்சயமாய்ப்படைக ளெல்லாம்போவென்பாயே ... ... ... (எ௰)

மயேந்திரசாலம்,

என்பாயேயிதுகளெல்லாமறைந்துபோகு மெழில்நீலகண்டிநூலே ணியிவாள்-தென்பாகத்திலகத்தையழித்துப்போடுதெளிவாகவின்னமொ ருவித்தைகேளு - வன்பானசாலக்காள்தியானமோதி வளமானமையெடு த்துக்கையிற்பூசி-அன்பாகமண்ணள்ளித்திசையிற்போடு அடைவாகமலை மலையாய்த்தோற்றும்பாரே ... ... ... (எக)

மாரடாஅஷ்டகுலபர்வதங்கள் பாங்கானமகமேரு கயிலையப்பா-சீர டாபொதிகைமுதல் மலைகள்தோற்றுஞ் சிறப்பாகவதிலிருக்குந்தேவர்சித் தர்-நேரடாமுத்தரொடுமுனிவர்தாமும் நெடியவிருட்சங்கள்குகைவாசல் தானும்-கூரடாவிதுகளெல்லாங் கண்ணிற்றோன்றுங் குணமானயோகரு டகடாட்சந்தானே ... ... ... ... (எ௨)

சமுத்திரசாலம்,

தானென்றமயேந்திரத்தின்சாலமாச்சு தயவாகச்சாகரத்தின்சாலங் கேளு-வானென்றமையெடுத்துக்கையிற்பூசி வளமாகமண்ணள்ளித்திசை யிற்போடு-கோனென்றசத்தசாகரமோரேழுங் குணமாகமுன்காணவருகு ம்பாரு- தேனென்றதீவாந்தரமெல்லாந்தோற்றுந் திருமாலும்லட்சுமியுந் தோற்றும்பாரே ... ... ... ... (எ௩)

மாரடாகப்பலொடுபடகுதோணி மலமச்சம்நீர்வாழுஞ் சாதியெல் லாம்-நேரடாசெகத்தோர்களெல்லாம்பார்த்து நிச்சயமாயிவனல்லோதே வனென்பார்-ஆரடாசாகரத்தின்ஜாலம்ஜாலம் அன்பானஜாலக்காள் வித் தையப்பா-தீரடாபோகருடகடாட்சத்தாலே திறமானபுலிப்பாணி பாடி னேனே ... ... ... ... (எச)

சங்கிலிஜாலம்,

பாடியேயின்னமொரு வித்தைசொல்வேன் பாங்காகமையெடுத்து கையிற்பூசி-ஆடியேநூல்கயிறுசங்கிலிதானப்பா அரியகெட்டிப்பாமைமந் திரவாளும்- கூடியேவாய்மேலேகையைவைத்துக் குணமாகப்பின்னிழுத் துக்கீழேபோடு-காடியேயனைவோரும்பார்த்துப்பார்த்து நலமாகவிழுங்கி விட்டானென்பார்தானே ... ... ... (எரு)

பட்டணஜாலம்,

தானுனயின்னமொருவித்தைகேளு தங்கிராக்காலமூர்வெளியிற்சென்று-மானுனவோரிடத்திலிருந்துகொண்டு மைந்தனேமையெடுத்துக்கையிற்பூசி - வானுனமண்ணள்ளித்திசையிற்போடு வளமானபட்டணமாய்த்தோற்றுப்பாரு - தேனுனதெருக்களொடுதெருவுந்தோற்றும் திறமாகக்கடைவீதிதோன்றும்பாரே ... ... ... ...(எசு)

பாரடாமனுக்கூட்டமனந்தந்தோற்றும் பருத்தகோபுரங்கோவில்குளமுந்தோன்றும்- சீரானவேதியர்கள்வீதிதோற்றுஞ் சிறப்பானராஜமனுசமுகந்தோற்றும் - கூரடாசதுரங்கசேனைதோற்றுங் குணமானசெங்நெல்முதல்தோப்புந்தோற்றும்- வீரடாபோகருடகடாட்சத்தாலே விதமாகப்புலிப்பாணிபாடினேனே ... ... ... ·(எஎ)

பிசாசஜாலம்,

பாடினேனின்னமொருதொழிலைக்கேளு பண்பானகொடிதனிலைக்கோலஞ்சேர்த்து - நாடியேசாம்பிராணிதைலங்கூட்டி நமசிவய ஓம்கிலீம் சவ்வும் ஐய்யும் - கூடியேசர்வபசாசாக்ருஷணியென்றுகுணமாகலட்சமுருஜெபித்துத்தீரு- ஆடியேயிதைச்செபித்துத்தூபம்போட ஆடுவார்பேய்கைபட்டஜெனங்கள்தானே ... ... ... (எஅ)

குறளிஜாலம்,

தானென்றகுறளியுடதியானங்கேளு தயவாகஓம் அவ்வும்உவ்வுமவ்வும்- தேனென்றஸ்ரீமுடனே இறீமுங்கூட்டித் தெளிவானகிலீமுடனே வயநமசியென்று-கோனென்றகுறளிவாவாவாசீயும் குணமாகச்சொன்னதெல்லாஞ்செய்வாயென்று-வானென்றஇந்திரசாலமையைப்பா வகையாகத்தானெடுத்துச்சொல்லக்கேளே ... ... (எகூ)

கோகர்ணஜாலம்-

கேளப்பாகுறளியைத்தான் லட்சமோதிக் கெணிதமாய்ப்பலிபூசைநடத்தியப்பா-சூளப்பாமையெடுத்துவிரலிற்றொட்டுச்சுகமாகக்குறளியைத்தான்தியானமோதி- வாளப்பாமேலெங்குந்தொட்டாயானால் வகையாகத்தொட்டிடங்கள்சுழிக்கவென்று - ஆளப்பாசெய்யென்றுநினைத்துக்கொண்டு அப்பனேதொட்டவுடன்சுழிக்கும்பாரே ... (அம)

கஜகர்ணஜாலம்,

பாரென்றகோகர்ணமிதுதானப்பா பண்பானகெஜகர்ணஞ்சொல்லக்கேளு-சேரென்றமையெடுத்துவிரலிற்றொட்டுச்செம்மையாயக்குறளியுடதியானஞ்செய்து - வேனென்றஇருகாதுந்தொட்டபோது விதமானவிருகாதுமாடும்பாரு-தானென்றகஜகர்ணமிதுதானப்பாதயவானபோகருடகடாட்சந்தானே ... ... ... ... (அக)

காளிவசியம்,

தானேயாகாளியுடதியானங்கேளு தயவான அரிகாளியாகாசகாளி- யனேயாஞ்டிகாளிவீரகாளி - உற்பனமாஞ்சூலகபாலகாளி மூனேயாமோடிதேவிபூமிகாளி முதன்மையாமோங்காளியோம்பிடாரி- வானேயாவாகாளிபோடிகாளி வளமானபத்திரமாகாளியெண்ணே ... (௮௨)

எண்ணவேலும்ஆம்கோதண்டரூபி எளிதானயாளிவாகனத்திலேறி- வெண்ணவேயரசரொம்சபைகள்மெய்ச்ச விருதலகைகொடியுடன் வேதாளஞ்சூழ-அண்ணவேயாங்காரசத்திகொண்டு அடைவாகவாவென்றுலட்சமோதிப்- பண்ணவேபூசையது வெள்ளிதோறும் பாங்காகச்செய்தக்கால்சித்தியாமே ... ... ... ... (௮௩)

செப்பிடுவித்தை,

சித்தியாம்வித்தையொன்றுசொல்லக்கேளுசெப்பஞ்சுயங் கஞ்சுகோல்தானென்று-வெற்றியாய்ச்சபைதனிலேயிருந்துக்கொண்டு விளையாடுங்காளியுடதியானமோது- பத்தியாய்ச்சாலமையைக்கோலிற்றேய்த்துப் பண்பானசெப்பஞ்சுமாடிப்பாரு- சத்தியாயஞ்சுபந்தும்லட்சம்பந்தாய்ச்சார்வாகவாடுமடாதாழ்வில்லாதே ... ... ... (௮௪)

எட்டிமூளிவித்தை,

இல்லப்பா அறுபத்துநாலுமோடி இதமாகவாடுமடாவிந்தக்காளி,வல்லமையாயின்னமொருவித்தைகேளு வளமானமாக்கொடியுஞ்சீலைசேர்த்து கொல்லவேசவத்தினுட்தயிலங்கூட்டிக்குணமான ஐங்கோலத்தயிலஞ்சேர்த்து-செல்லவேமூன்றையுங்கருக்கிக்கொண்டு செம்மையாயம்மியிலேயரைத்திடாயே ... ... ... ... ... ... (௮௫)

அரைத்தெடுத்துசிமிழதனில்வைத்துக்கொண்டு அடைவாகமந்திரத்தைச்சொல்லக்கேளு-கிரையநமயங்வங்சிங்சுவகாவென்றுதிறமாகலட்சமுருசெபித்துப்போடு-கருத்தடவியெட்டிமூளிதன்னைச்சீவிக் கனிவாகமந்திரமாயிரந்துநேருகி -நிரைத்தமகாபூசைபலிபெலக்கச்செய்து நினைவாகமூளியெடுத்துக்கடாவுவாயே ... ... ... (௮௬)

கடாவுவாய்கடைமுன்னேதடையில்லாது கனிவாகச்செக்கடியி லெண்ணெயில்லை - அடாவுவாயாலேயடிசாறுமில்லை அப்பனேவஸ்தபெப்புமூன்றுதாகக்- கிடாவவேவஸதுவதுமிறங்காதப்பா கிருபையுள்ளசூளையதுவேகாதப்பா- நாட்டாவியேகொல்லனுலேசுண்ணாம்புச்சூளைநலமானசெங்கல்லின்சூளைதானே ... ... ... ... (௮௭)

தானேதான்மயானமுன்புபிணம்வேகாது தயவானமக்கமடிவிசைவு மில்லே-தேனேதான்தச்சனெடுகென்றான்தட்டான் தெளிவாகப்பட்டடை முன்தாக்கிப்போடு- மானேதான்மரிகாரிசிறைக்கும்பக்கல்மைந்தனேயடு ப்படியில்வேகாதொன்றும் - வானேதானிதுகளெல்லாந்தம்பஞ்செய்யும் வளமானபோகருடகடாட்சந்தானே ... ... (அஅ)

தானென்றவெள்ளாவிமுன்னேதாக்கத் தயவாகவெள்ளாவிவேகாத ப்பா-கோனென்றநெற்களத்தில்ராசிகுன்றும் குணமானவுப்பதுவும்விளே யும்பக்கம்- தெவென்றராசியதுகுறையும்பாரு தெளிவானமீன்கணையில் மீன்கிட்டாது-ஆனென்றகொட்டணத்தில்நெற்களெல்லாம் அப்பனேம சியாதுகண்டுபாரே (அகூ)

பாரடாநாவிதனேச்சுட்டகோலும் பண்பானமுனேசெதுக்கி உகாரம் காட்டி-சீரடாஐங்காயக்கருவும்பூசிச்சிறப்பானவெதிரிமலந்தன்னில்தாக்க வீரடாமுன்பின்னுமடக்கும்பாரு விதமாகமாரணமாய்ப் போவானேயா- கூரடாமுளே பிடுங்கிநீரிற் போடக் குணமாகுமடிந்ததெல்லாம் நிவர்த்தி தானே... ... ... ... ... ... (கூ0)

சண்டை சாலம்.

தானென்றாஞ்சடியில்காக்கையென்ற தயவானமூலிகையொன்றெ ன்னசொல்வேன்-ஊனென்றவிலங்கையிலேகுரங்குமூலி உத்தமனேமலே தோறும்உண்டுஉண்டு-வானென்றவிருமூலிவேணமட்டும் வகையாகப்பிடு ங்கிவந்துசொல்லக்கேளு - ஆனென்றாஞ்சடியில்காக்கைமூலி அப்பனே யொருசரக்கில்கடைமேல்வையே... ... ... (கூக)

வையடாஇலங்கையினிற்குரங்கையப்பா வளமாகஒருசரக்கில் வை த்துப்போடு-பையவேயாருக்குங்காணவிட்டால் பண்பாகவிரும்பிலேபதி த்துப்போடு-ஐயோதானிதன்கொடுமைசொல்லப்போமோ அப்பனே யி ருகடைபேரடித்துக்கொள்வார் - கையவேதம்பியென்று கூப்பிட்டாலும் கடுகிவைதானென்றே கண்டிப்பாரே ... ... (கூஉ)

மாடன்மந்திரம்,

பாரடாநஞ்சுண்டுமரித்துப்போன பரிவானமனிதனைத்தான்தகனம் பண்ணிச்-சீராகக்காடாற்றுமுன்னேதானுஞ் சிறப்பாகக்கரியதிலே யெடு த்துக்கொண்டு-வீரானஐங்கோலக் கருவைத்தொட்டு விதமாகவாண்மேல லேமாடன்கிறித்-தீராகமுகமதுதான் கதித்ததாகத்திறமாகச்சுவரதனிலே மூதிப்போட்ே ... ... ... ... ... ...(கூங)

போடப்பா எதிரிபேரதின்கீழ்நாட்டிப் பொங்கமுடனுகா சமட்டனே து-கூடப்பாலெட்சமுருஜெபித்துப்போடு குணமானமந்திரந்தான் சொல்லக்கேளு - நாடப்பா ஓம் நமோறகவதே ஓம் நலமாக ஓம் பசுசுவாகா வென்று - ஆடப்பாபூசைபலியலக்கச்செய்து அடவாகமந்திரந்தா னேதக்கேளே... ... ... .. ... ... (௬௪)

சேனடாகாரீயத் தகட்டிலப்பா செணிதமாய்மந்திரத்தை யெழுதிப் போடு-ஞனடாவெதிரியுடபேனாநாட்டுச் சுகமானஐங்காயமைங்கோலஞ் சேர்த்து-ஆனடாசுடலையுடகருவுங்கூட்டி அப்பனேமத்தித்துத் தகட்டிற்பூசி-வானடா பூசைபலிலக்கச்செய்து வளமானமாடனைத்தான் தியானமோதே (௬௫)

ஓதியேமாடனைத்தான்தகட்டிற்கெல்லு ஒளிவானவாகாச மாடாநீயும்-வாதியாய்க்கல்லிந்தாவிந்தாவென்று வகையாகச்சொல்லியபின் கல்லுதானும்-ஆதியாந்தகட்டின்மேல் வைத்தாயானால் அப்பனேகல்லதுவுமளவிராது-பாதியேயொருகோடி பூதமெல்லாம்பார்த்திருக்கத்தா னெறியுங் கல்லுதானே (௬௬)

தானேதான்மண்ணெடுத்து சீலைக்கற்கள் தயவாக மாட்டெலும்பு செங்கல்முட்டை - மானேதானவமாண்ட மரிசியுப்பு வளமானமிளகுபொடிநீட்டுச்சீலை-வானேதான் குப்பையொடுகண்டதெல்லாம் வாரியேதானெறியுமில்லந்தன்னில் - கோனேதானெதிரியோமிடங்க ளெல்லாங் கோற்றவனேயவனருகேபோகும்பாரே (௬௭)

பாரடாசத்துருவும்வணங்கிவந்தால் பண்பானமாடனை நீ யழித்துப் போட்டு-வீரடாமாடாநீ கல்லைத்தானும்விதமாகத்தாவென்றே யெடுத்துப்போடு-சீரடாசாணமிட்டு மெழுகிப்போடுதிறமாகசசக்கரத்தைக்கழுவி நீயும்-கூரடாசலந்தனிலே விட்டுப்போடு குணமாகமாடனைத்தான்பூசைசெய்யே ... ... ... ... ... (௬௮)

## கொள்ளி ஜாலம்

செய்யவேயின்னமொரு வித்தைகேளு செயலான கொள்ளிவாய்ச்சாலமப்பா - பையவேசிவவுசியென்றுலட்சம்பாங்காகத்தான்செபித்துப்பூசைசெய்து - உய்யவேயக்கினியைத்துணியிற்சுற்றி யுத்தமனேதகட்டிலட்சரத்தைக்கீறிக் - கையவேயைங்காயமைங்கோலந்தான் கனிவாகச்சுடலையுடகருவும்பூசே ... ... ... (௬௯)

பூசியே யெதிரியுடபேரைநாட்டிப் பொங்கமுடன்பூசித்துக் கொள்ளிவாய்க்கு - ஆசியேபர்தெடுத்துத்தகட்டில்வைத்தேயப்பனேயிருதலைக்கொள்ளிதானும்-வாசியேசத்துருவின்மனைகள்தோறும்வைத்துநீ கொளுத்தென்று தியானமோது-காசியேகொளுத்துமடாதிரியும்பந்து கடிதாகக் கொளுத்திவிடுங் கண்டபோரே (௱)

மலக்குட்டி.

பாரடாமலக்குட்டி தியானங்கேளு பாங்கான ஓம் இறீம்வாவாவென்று - கூரடாமலககுட்டிச் சாத்தாவென்றுகுணமாகநான்வைத்தபூசைகொண்டு - வீரடாநான்சொல்லும்வேலைகேட்டு வீணாகமலமதனை வாரிநீயுஞ் - சேரடா காளினைத்தவிடத்திற்போடு செப்பிதுராசபலி பலக்கச்செய்யே ... ... ... ... (௱௧)

மலக்குட்டிசாலம்,

செய்யவேமந்திரத்தைத்தகட்டிற்கீறிச் செம்மையா யைங்காயமைங்கோலஞ்சேர்த்து - வையகத்திற்சுடலையுடகருவுங்கூட்டி வளமர்கமத்தித்துத் தகட்டிற்பூசிப்-பையவேயெதிரிபேர் தகட்டில்நாட்டிப்பாங்கானமந்திரத்தை லட்சமோது - ஐயமின்றிப்பூசைபலிபலக்கச்செய்து அப்பனேமலமெடுத்துத் தகட்டில்வையே ... ... ... (௱௨)

வைக்கையிலேமலமிந்தாமலக்குட்டியென்று வைத்தல்லோமந்திரத்தைத்தியானஞ்செய்நீ-அக்கையிலேமலமதனை வாரிக்கொண்டு அடைவாக நீநினைத்த விடங்கள்தோறும் -சொக்கையிலேதகடெடுத்துக்கழுவிப்போடுசொருசாகப்போகுமடா தீர்க்கமாக-உக்கையிலேயிதுவல்லோவுலகயேதம் உத்தமனேமலக்குட்டிச்செய்கைதானே ... ... (௱௩)

கவசமந்திரம்,

தானேதான்கவசமொன்றுசொல்லக்கேளு தயவாகறீங்காரம்வெளிமுகட்டில்-மானேதான் - இம் உம் நம் நமாசிங்கென்று மைந்தனேயாயிடாகினிமாங்காளி - ஊனேதான்விஷ்ணுசகோதரிவாணி-யுமைதேவிபராசக்தி கவசியென்று-கோனேதான்லட்சமுருசெபித்துமோடு கொற்றவனேசத்திசிவ பூசைசெய்யே... ... ... .. (௱௪)

செய்யடாதியானமிட்டு விபூதிபூசிச்செகதலத்தி லேவல்முதற்பசாசுபூதம்-பையவேபுதைபில்லி வேர்பிடுங்கிப்பகர்ந்தகருத்தடவிச்சக்கரங்கள்வாட்டல்-நையவேபார்வையுடன் குறளிகுட்டி நலமாகமற்றுள்ளகுணியங்கள்-கையவேகல்லெரிக்குந்தீக்குமப்பா - கனிவாகமந்திரத்தையெழுதிக்கட்டே... ... ... ... ... ... (௱௫)

ஒண்டிமூலிகை,

கட்டப்பாமூலியொன்றுசொல்லக்கேளு கனிவாகவொண்டியுடமூலிக்கேதான்-கிட்டப்பாஅமாவாசைக்கிராணகாலங் கிருபையுள்ள அருகனுளேதொன்றப்பா-செட்டப்பாபொங்கல்பலி பூசைசெயதுநேராகவே செடுத்துக்கட்டிக்கொண்டால்-பட்டப்பாபார்வைமுதலெதுவானாலும்பக்கத்திலணுகாமலகன்றுபோமே ... ... ... ... (௩௬)

போமப்பாஆமையொன்று மணத்தவளையொன்று பொங்குமுடன் கோழியுடமுட்டையொன்று-தாமப்பாபுதைத்தேலும்பு பலந்தான்ரண்டு தயவானசலதுபலந்தான்ரண்டு-நாமப்பாநிலாவரைவிதைதானப்பா நாய கனேபலமிரண்டு நிறுத்துப்போடு-ஆமப்பாமாங்கொடிதான் வராகன்மூன்று அடவாகப்பூத்தயிலமுர்க்வாங்கே... ... ... (௩௭)

வாங்கியேதயிலத்தையெடுத்துக்கொண்டு வளமானகுழியம்மி தன்னிற்போடு-தாங்கியேயஞ்சனக்கல்வராகனென்று தான்போட்டு ஆள்காட்டிமுட்டைசெய்யில்-பாங்கியேகொஞ்சமதுகூட்டிவிட்டுப்-பரிவாகவொருசாமந் தானரைத்துக்-காங்கியே சிமிழில்வைத்தனுமாருக்கும் - கனிவாக அஞ்சனிக்கும் பூசைசெய்யே... ... .. ...(௩௮)

செய்யப்பாமையெடுத்துப் பார்க்கும்போது செயலான களவுமுதலேவலப்பா-வையப்பாதொழில்முறையுந்தெய்வபூதம் - வளமானபசாசுராட்சதகணங்கள்-மையப்பாமோடிதா னொருவன்செய்தால் பாங்காகவவன்செய்கைதோற்றலாகும்- கையப்பாஇதுபார்வைமைதானப்பாகனிவாகச்சொல்லுமடா கருத்தாய்தானே ... ... ... (௩௯)

வாணமடக்க,

தானேதானின்னமொன்றுசொல்லக்கேளு-தயவாகஆயுதமடக்க அங்கமடக்க-மானேதானங்கமேற்றங்கமடக்கமைந்தனேவழியடக்கச்சுவாகாவென்று-கோனேதான் தண்ணிமிட்டான் கிழங்குக்கப்பா கொற்றவனே யருக்கனுள் கப்புக்கட்டி-வானேதான்பொங்கல்பலி பூசையிட்டு வளமானமந்திரமாயிரந்தானுருவே... ... ... ... (௪௰)

ஓகியே பிடுங்கிமுன்கருவைப்பூசி ஓகோகோகாலடியில் மிதித்துக்கொள்ளு - சோதியே வாணமதுளதிரோருறு சுறுக்கானமந்திரத்தைபோதிவில்லு - ஆதியே வாணமது வெடிக்கும்பாரு அந்தரத்தில் செல்லாது அதிதவித்தை- வாதியேயோகருட்கடாட்சத்தாலேவளமாகப்புலிப்பாணி பாடினேனே,.. ... ... ... ... ... (௪௧)

### பாதாள அஞ்சனம்,

பாடினேனூசியென்றகாந்தம்நீலம் பண்பான்வூமைகையில் மஞ்சளப்பா, ஆடியேவேசிகைவெற்றிலையுங்கூட அடைவானசெங்கழுநீர் வேருமையா- நாடியேதலைமஞ்சன்மாவுங்கூட்டி நலமானகோரோசினை குங்குமப்பூ- கூடியேவகைவகைக்குவிராகனொன்று குழியம்மிதனிலரைக்கவகையைக்கேளே ... ... ... ... ... (௱௰௨)

கேள்டாமாடமென்றபுருவின்ரத்தங் கெணிதமாயொன்றறுத்துக்கூடவாரு-குளடாசிவந்தபசுவெண்ணெய்யப்பா சுகமாகவராகனது பனிரண்டாகும்-நாளடாமூன்றுநாளைத்தெடுத்து நாயகனேசிமிழில் வைத்துக்காளிமுன்பில்-வாளடாபுதைத்தெடுப்பாய்நாளெட்டாகும்வளமானபுழுகுடன்சவ்வாதுசேரே ... ... ... (௱௰௩)

சேரப்பாவகைவகைக்கு விராகனொன்று சீராகமத்தித்துமந்திரந்தான்- பாரப்பாசர்வலோகவசிகரிஓமென்று பண்பாகஆயிரத்தெட்டுருசெபித்து-நேரப்பாதிலகமிடு புருஷர்பெண்கள் நிச்சயமாய்க்கேட்டதெலா மீவாரப்பா-கூரப்பாபகைகளெல்லா நசித்துப்போகும்குற்றமொன்று மில்லையடாசெகததில்தானே ... ... ... (௱௰௪)

தானப்பா * வேர்வெடித்தபலவின் கொட்டைதான் கருக்கிவராகனெடைபத்ததாகும் - தேனப்பா அஞ்சனபாஷாணமொன்றுதெளிவாகக்குழியம்மிதன்னிற்போட்டு - வானப்பாவிளக்கெண்ணெய் தன்னிலாட்டு வளமாகவொருசாமமரைத்தபின்பு-கோனப்பாசிமிழில்வைத்தஞ்சனிக்கும்-குணமானவனுமூர்க்கும் பூசைசெய்யே ... ... (௱௰௫)

செய்தபின்புகையிலிட்டெவரும்பார்க்கச் செகத்திலுள்ள நிதிகளெலாங்கண்ணிற்காணும்-எய்தபின்புவேண்டியதையெடுத்துக்கொள்ளு இதமாகவிகபரத்துக்குறுதியாகும் - உ[illegible]பின்புநாழிகைதான்பாதாளத்திலுத்தமனேநிகளமூந்நூறுகாதம்-பைதபினபு இம்மைதானுறுதிமெத்தப்பார்த்தவர்க்குப்பலனுண்டு பலிக்கும்பாரோ ... ... (௱௰௬)

### குறிசொல்ல.

பாரடாஆடையொட்டிசமூலமப்பா பண்பானநின்றிடந்தீஞ்சமூலி- சேரடாகருச்சிலை இந்தமூன்றும் செம்மையாய்க்கருக்கியல்லோமைபோலாட்டி-சீரடாசுட்லையென்றதயிலஞ்சேர்த்துச் செவ்விதாயரைத்துநீ சிமிழில்வைத்து-வீரடாஅனுமாரைத் தியானஞ்செய்து விதமாகத்திலகமிட்டுக்குறிதான்சொல்லே ... ... ... (௱௰௭)

---

* வேர்வெடித்தபலவின்கொட்டை-வேர்ப்பலாக்கொட்டை,

சொல்லப்பா அஞ்சனா தேவிபுத்திரா சொருசானவாய்வுமைந்தா பு
ருஷரூபா-வல்லபா அநுமந்தா ராமதூதா வந்தகுறிசொல்லென்று வணங்
கிக்கேளு - இல்லப்பா நினைத்ததெலாஞ் சொல்வான்பாரு என்னசொல்
வேணுமனுட குறிதான்மைந்தா - நல்லப்பா போகருடகடாட்சத்தாலே
நலமாகப்புலிப்பாணி பாடினேனே ... ... (௱௰அ)

சுடுமுறை,

பாடியேயினியொன்று சொல்லக்கேளு பண்பான அடைக்கலாங் கு
ருவியாண்தான்-ஆடியேபிடித்துவந்தபானங்கைத்து அதின்வாயிலூசியெ
ன்றகாரந்தம்வெள்ளை-கூடியேவாயைநீதைத்துப்போடு- குணமான சிறுயா
ண்டமதிலேவிட்டு-நாடியேவஸது ஒருபடிதான்வார்த்து நலமாகவாய்மூ
டிச்சீலைசெய்யே ... ... ... ... (௱௰௯)

செய்தபின்மடிப்பேற்றித்தீயைமூட்டிச் சிறப்பாகவொருசாதி விறகி
னாலே-வைதுநீவற்றியபின் பெடுத்துக்கொண்டு-வளமானகுழியம்மிதனி
னிற்போட்டு - கொய்தபின்புரோமமுடனஸ்திதள்ளிக் - குலவுமாக்கொ
டியுமருஞூமத்தைவித்தும்பைதபின்புகழல்வண்டுமின்னற்பூச்சிப்-பருத்
தகுழியானையிந்திரகோபந்தானே ... ... (௱உ௰)

தானென்றதொட்டாக்கால்வாடிவேரும் தயவாகநாயுருவிகையான்
வேரும்-தேனென்றதிகைப்பூடு பூச்சியப்பா-திறமாகவகைவகைக்கு விரா
னென்று-கோனென்றநாப்புரியுமியுங்கூடக் கொற்றவனே யானையொட்
டியைவிரலிகஞ்சா- வானென்றபேய்க்கருப்பஞ்சாற்றினாலே வகைவகை
க்குச்சரியெடையாய்விட்டுஆட்டே ... ... (௱உக)

ஆட்டப்பாகுளிகையதுதுவளை போலே-அப்பனேசெய்துநீழலி லு
லர்த்தி-காட்டப்பாமந்திரந்தான்சொல்லக்கேளு நமோ இங் இங்சிங்சிங்சிங்
சுவகாவென்று-மாட்டப்[illegible]விந்துவிட்டுக்குழைத்துநீயும்மங்கையருக் கறு
சுவையில் தாம்பூலத்தில்-கூட்டப்பாமங்கையர்கள்விரகமீறிக் கொம்மனே
யார்தாமணையவருவார்பாரே ... ... (௱உஉ)

பிறிவு

யாரடாபிறிவுக்குக்குளிகையொன்று பாடுகிறேனன்றூகச்சொல்லக்
கேளு-வாளடாசெத்தாடுஉண்ணியப்பா வளமானவிடத்தலமாம்மட்டை
கூட்டி - நீரடாதண்ணீர்விட்டரைத்துமையேபோல்நினைவாகத்துவளைபோ
ற்குளிகைசெய்து-கூரடாகொடுத்தவுடன்முறிந்துபோகும் கொற்றவனே
யறுசுவையில்தாக்கிப்போடே ... ... ... ... (௱உ௩)

வசியம்.

போடவேயின்னமொன்றுசொல்லக்கேளு புகன்றபொன்னுவரைசமூலம்வாங்கி- ஆடவேகருக்கியதைகிழலுலர்த்தி யப்பனேகுழித்தயிலமாகவாங்கி - கூடவேகுழியமமிதன்னில்விட்டுக்குக்குடத்தின் வெண்கருவுங்கூடவிட்டுச்-சாடவேமாக்கொடியும்புழுகுபூரம் தக்கேகோரோசினையும்வகைக்குஒன்றே ... ... ... ... (௱௨௪)

ஒன்றானவகைவகைக்குவீராகனென்று ஒழுங்காகத்தானரைத்துச்சிமிழில்வைத்து-நன்றாகத்திலகமிடப்புருஷரெல்லாம் நாயகியாள்கேட்டதெலாமீவார்பாரு - ஒன்றாகவவர்வந்துவாசல்காப்பார் உனக்கடிமையாகியல்லோவேலைசெய்வார்-பன்றாகவவன்தனையேகாணுவிட்டால்பதறுவாள் சிணுங்குவாள்கோவிப்பாளே ... ... ... (௱௨௫)

கோவிதமாயின்னமொருமார்க்கங்கேளு குணமாம்புல்லாமணக்குச்சமூலம்வாங்கி-ஆவிதமாய்மாதவிடாய் மூன்றுநாளும்அப்பனேகட்டிவைத்துநாலாநாளில்,தாவிதமாய்மாக்கொடியும்வீராகனென்று-தனியாகமுன்சீலைவராகனென்று பூவிதமாயவணீராலரைத்துமைபோல் பொங்கமுடன்துவரைபோற்குளிகைசெய்யே ... ... (௱௨௬)

செய்யப்பாகுளிகையது தாம்பூலத்தில் செயலானவறுசுவையிலன்னப்பாலில்வையப்பாகொடுத்தவுடன்மயங்குவார்கள்வாணுதலார்தான்பிரியார்மறுமுகமும்பாரார்-கையப்பாமகிழ்வாகமருவிவாழ்வார்-கடன்வாங்கித்தான்கொடுப்பாரேவலாளாய் ஐயனேயவர்பிறியச்சிந்தை செய்யார்-அப்பனேயினிபிரியுங்குளிகைமாட்டே ... ... (௱௨௭)

மாட்டடாபெண்பிரியும் பிறிவுக்கெல்லாம் மைந்தனேகடுகோடுயானச்சாம்பல்- கூட்டடாகுடிபோனவீட்டுமண்ணும் குணமானவருக்களிரவுவேளை-நாட்டடாகர்த்தபந்தான் புரண்டமண்ணும் நலமான தச்சனுளிச் சிராயுஞ்சுற்றி-ஆட்டடாமுப்பாதைபிறிந்தமண்ணும் அப்பனே மந்திரத்தைச்சொல்லக்கேளே ... ... ... ... (௱௨௮)

கேளேஓம்ஸ்திரீய பிரியநசிநசியென்று கெணிதமுடனிருவருட பேருமாறிச் - சூளடாவைங்காயமரைத்துப் பூசிச்சுறுக்காகமந்திரமாயிரந்தானேகி-வாளடாசிலையிலேவைத்துக்கட்டி-வளமாகப்பூசைசெய்திறப் பின்முன்பில்-கோளடாவைத்துவிடு இருவர்தாமுங்கொற்றவனே பிறிபட்டுப்போவார்பாரே ... ... ... ... (௱௨௯)

தாதுபுஷ்டி

பாரப்பாசந்தனமுந்தேற்றான்வித்தும் பண்பானபூமிசக்கரையின்மூலம்- சேரப்பாபூனையென்றகாலிவித்துஞ்செயலானமுருங்கைவேர்ப் பட்டைகூட்டி- கூரப்பாவகைவகைக்குவிராகன்ரண்டு கொற்றவனேதானரைத்துத்தேங்காய்ப்பாலில்-நீரப்பாசீனிசர்க்கரையும்போட்டுத் திறமாகக்குடிப்பாயிராறுநாளாமே ... ... ... ... ... (௱௩௰)

ஆமடாகுடித்துவரத் தாதுபுஷ்டியப்பனே வீரியந்தான்விளையும்பாரு-தாமடாகூடுகள்தான்தணியும்பாரு - தளதளப்பாய்த்தேகமதுகாந்தியுண்டாம் - வாமடாபெண்களைத்தான்புணர்ந்தாயானால் வளமானமன்மதனேயிவனென்பார்கள்-நாமடாபோகருடகடாட்சத்தாலே நலமானபுலிப்பாணிபாடினேனே ... ... ... ... (௱௩௧)

வஸ்துபாண்டமுடைய.

பாடியேயின்னமொருவித்தைகேளு பரிவானசாராயமூறும்பட்டைநாடியேகொணர்ந்துகருச்சீலைசுற்றி நாயகனேகாளிகோட்டமுன்பில்வைக்க- ஆடியெபானையெல்லாமுடையும்பாரு அடைவாகவிறங்காதுகெட்டுப்போகும்- கூடியேயெடுத்தெறிந்து போட்டாயானால் குணமாகப்பானையதுவிளையும்பாரே ... ... ... ... (௱௩௨)

விளைவுகெட,

விளைவுகெடக்கொடிவேலிகாப்புக்கட்டி விதமாகரம்மென்று லட்சமோதி-களவாகக்கலசத்தில்வைத்துமூடிக் கனிவாகக்கருக்கூட்டிக்காடுசெந்நெல்- விளைவுபெறுங்கொடிக்காலுங்கன்னல்வாழை விதமானதென்னமரச்சோலைதோப்பும்- அளவுபெறவைக்கவெல்லாப்பலனுங்குன்றும் அப்பனேயெடுத்தெறிந்தாற்பலனுண்டாமே ... ... (௱௩௩)

விளைவுபெருக,

ஆமடாநாயுருவி காப்புக்கட்டி அப்பனேஸ்ரீமென்றுலட்சமோதி-தாமடாகாடுசெந்நெல் கரும்புவாழை தயவானகொடிக்காலுந்தென்னந்தோப்பும் - வாமடாஐங்கோணக் கருவும்பூசிவளமாகக்கலசத்திற் புதைத்தாயானால் - நாமடாஇதுகளெல்லாமதிகமாகும் நலமானபோகருட கடாட்சந்தானே ... ... ... ... (௱௩௪)

பூதபிசாசவினோதம்,

தானானசொரிதவளைபிடித்துவந்து தயவாகச்சாம்பிராணி வேணமட்டும்-மானானஅகின்வாயிற்செலுத்தித்தைத்து மைந்தனேபுகையூறத் தலைகீழ்கட்டி-வானானமண்டலந்தான் கடந்துவாங்கிவளமானசாம்பிராணியெடுத்துக்கொண்டு-ஆனதோர்தலைமஞ்சங்கொடியுங்கூட்டி அடைவானசாம்பிராணிபுகையும்போடே ... ... ... (௱௩௫)

போட்டப்பா புகைபிடிக்கப் பசாசுபூதம் பொங்கமுள்ளதேவரொடுமு னிகறுப்பன், நாடப்பாபிரமராட் சதனுஞ்சாத்தான் நலமானலாடன்சப் பாணிபின்னும், கூடப்பாஓமென்றுபோட்டாயானால் கொற்றவனேதலை விரித்தாடும்பாரு, ஆடப்பாபேருருஞ்சொல்லுமையா அப்பனேபுகையி னுட்பெருமைதானே ... ... ... (௱௩௬)

பெருமையாபின்னமொரு மார்க்கங்கேளு பேணியேமனிதாஸ்திகூ ழுதையஸ்தி, அருமையாய்ககழுதையின்தண்டுச்சீலை யப்பனேமனிதர்ம லம்பண்ணிலத்தி, உரிமையாங்காக்கணம்வேர் சீக்கிலமேனி யுத்தமனே முட்டைகொஞ்சஞ்சேர்த்திடித்துத், தெரிவானபுகைபோட்டுத்தேவர்யாரு ந் திறமாகவாடுவர்காண்சீயென்றேதே ... ... (௱௩௭)

வித்தைஜாலம்.

ஓதவேபின்னமொருவித்தைகேளு ஒளிவான சிதம்பரத்தின் பூசை சொன்னோம், கோதிலுச்சாடனசக்கரத்தைக்கீறிக் கொற்றவனேபிராமண ரிற்பிரமசாரி, ஆதாவாயவன்மரித்துத்தகனமாகி யப்பனே காடாற்றுமு ன்னேதானும்,வாதாக அஸ்தியொன்றெடுத்துவந்து வளமானவஸ்துவொ ருமேருவாங்கே ... ... ... ... ... (௱௩௮)

வாங்கியேசக்கரத்தைலட்சமோதி வளமாகத்தான்புதைப்பாய்தேவ ர்பின்பில்,பாங்கியேவஸ்துவுடனஸ்திதானும் பாங்காகத்தேவர்முன்புதை த்துப்போடு, தாங்கியேபலிபூசைசெய்தாலப்பா தயவாகத்திருநடன மா டும்பாரு, ஓங்கியேகேட்டவரங் கொடுக்கச்செய்யும் உத்தமனேஜெனங் கூட்டமாகும்பாரே ... ... ... ... (௱௩௯)

தேள்கடியிறங்க.

பாரடாஇன்னமொரு வித்தைகேளு பாங்கானசெம்போத்துநாக்கு மைந்தா, சேரடாவுடும்புடையநாக்குங்கூட்டிச் செயலானகீழ்க்காயின்மூ லம்வாங்கிச், கூரடாரசமப்பாவிராகனென்று கொற்றவனேயாண்கழற்சிக் காயினுள்ளே, நீரடாகிராணமதுநீண்டும்போது திறமாகவெடுத்துசொ சுமெழுகில்மூடே ... ... ... ... (௱௪0)

மூடியேதேள்கொட்டிவந்தபோர்க்கு முன்னாகக்கழற்சியதைக் கையி ல்தந்து, ஆடியேபின்னொருவர்கையிலீந்தால் அப்பனேயிவனைவிட்டவன் மேற்போகும், நாடியேதேளின்விஷமென்னசொல்வேன் நடுநடுங்கியழு திடுவானெறியுங்கட்டும், கூடியேராயைநீயோடென்றுக்கால் குணமாகப் போட்டவுடனிறங்கிப்போமே ... ... ... ... (௱௪௧)

## சிலைமெழுகுமாலை.

போமென்றகருநாயின்விலாவின்வில்லும் பொங்கமுட்டையாகத்தினரம் புதானும், ஆமென்றசுட்டலையின்கருவுங்கூட்டி யப்பனையைங்கோலத்தயி லஞ்சேர்த்து, நாமென்றநாணதிற்பூசியப்பா நாயகனேசுழிப்பிணுட தியா னங்கேளு, தாமென்ற ஓம் ரீங் ரங் மங் சங் ஐயும் தயவாக றீம் ரங்லா லீலூவென்னே ... ... ... . ... ... (௱௪௨)

என்னவேமங்சிங்சிவயநமவென்று என்னசொல்வேன் மந்திரத்தை லட்சமோதிப், பன்னவேபூசைபலிபெலக்கச்செய்து மாங்கான வெதிரி பேர் தன்னைச்சொல்லி, நன்னவேநாணேற்ற வியாதிகொண்டு நடுநடுங்கி மரணமதாய்ப்போவான்பாரு, அன்னவேசுழிப்பிணுடவீரமெத்த ஆரறிய ப்போகிறாருமைதானே ... ... ... (௱௪௩)

தானென்றசிவன்காளி கணபதிகந்தன் தயவானவயிரவனும் பெரு மாளையன்,கோனென்றவநுமனொடு கறுப்பனப்பா கொற்றவனேயவர்கள் மெழு கெடுத்துக்கொண்டு, தேனென்றவகைவகைக்குவிராகனென்றுதெ ளிவானமெழுகுபதினெண்வராகன்,வானென்றஐங்கோலமைங்காயஞ்சே ர்த்து வளமானசுட்டலையுட்கருவுங்கூட்டே ... ... (௱௪௪)

கூட்டியேலேகித்து உருப்போற்செய்து கொற்றவனேமயானருத்ர ன்தியானமோது,நாட்டியேமம்யம்டம்டம்மென்று நலமானமயானரு த்ராகட்டுகெட்டு, சூட்டியேயெரியெரியென்றுலட்சஞ் சுகமாகத்தானோதிப் பூசைசெய்து, ஆட்டியேசத்துருப்பேரொழுதிவைத்து அப்பனே யுருவயி ற்றிற் பதித்துப்போடே ... ... ... ... (௱௪௫)

பதித்துநீயாயிரத்தெட் டுருஜெபித்துப் பண்பானபூசையதுபாங்கக ய்ச்செய்து, அதித்துநீமுப்பத்திரண்டுறுப்பில் அப்பனேமுட்க்கிவைகா முடமதாவான், சுதித்தவுட னூசியிலேகுத்தும்போது கனிவானவிரல்நக ங்கள்காதில்குத்தும், நதித்தவுட்னூசியது செருகிவைக்க நாயகனேகுத்த லெடுத்தலறுவானே ... ... . ... ...(௱௪௬)

அலயியேயவன்வணங்கிவந்தானானல் அப்பனேமுட்ந்திருப்பி யூசி வாங்கு, நலவாகவயிற்றில்வைத்தசிட்டும்போக்கு நாயகனேநிவர்த்தியாய் ப்போகும்பாரு, குலமானபாவையைநீபதனம்பண்ணு கொற்றவனே நி னைத்தபோதெடுத்துசசெய்நீ, பலமாகஇப்பாவை கையில்வேணும் பார்த் தவர்க்குப் பலனுண்டு பலிதமாமே ... ... ... (௱௪௭)

ஆமப்பா ஐயும் கிலீம் சுவாகாவென்று அடவாகலட்சமுரு செபித்துத்திரு, நாமப்பாபூசையப்பாசத்திபூசை நாள்தோறுமண்டலந்தான் தினமுஞ்செய்நீ, வாமப்பாமண்டலத்திற்சித்தியாகும் வளமாகவேணுமென்ற தெதுவானாலும், ரோமப்பாநீசொல்லித் தியானஞ்செயயப் போகுமேயவரிடத்திற்கனவில்தானே ... ... ... (௱௪௮)

கனவிலேபேய்போற்பெண் போற்போய்சொல்லும் கனிவாகஇன்னுனையழைத்துநீதான், வினவியேயின்னதெலாங்கொடுத்துநீயு மீறுதேயவன்சொல்லையெதுசொன்னாலும், பனுவலாற்றேவியுட வருள்தான்பெற்றோன் பண்புள்ளோனல்லகுணனென்றுகூறும், அனுவியேசொற்பனந்தான்வராகியாலே அப்பனேஜெகமுழுதும்வணங்கும்பாரே ...(௱௪௯)

பாரடாபேய்நரிநாய்குடித்தபோது பாவமில்லையதின்சோற்றையொன்றில்வாங்கிச், சேரடாவரிசியதிலுலரப்போட்டுச் சேர்த்துப்பாசுடலையுட்கருவுங்கூட்டிக், கூரடாநிழலதனிலுலரவைத்துக் கொடிதாகவரிசிகொஞ்சமறுசுவையிலன்னம், வீரடாசத்துருவுக்கிட்டபோது விதமானபிரமைகொண்டலைவான்பாரே ... ... ... (௱௫௰)

மாரப்பாமிளகுதக்காளிச்சாறு பண்பாகமூன்றுநாளாறுவேளை, கூரப்பாகொடுத்திடவேதிரும்பாது குணமாகநிவர்த்தியாய்ப்போகுங்கண்டாய், சீரப்பாபத்தியந்தானுப்பாகாது சிறப்பானவேழாநாளெல்லாங்கூட்டு, வீரப்பாபோகருட்கடாட்சத்தாலே விதமானபுலிப்பாணிபாடினேனே ()

## மோடிவித்தை.

பாடினேனின்னமொரு மோடிவித்தை பண்பான நடனசிதம்பரத்தைக்கூறி, ஆடினேனட்சரமும்பீஜமெல்லாம் அடைவாகத்தானடைத்தருளையோதிக், கூடவே ஓம்ஸ்ரீயும் ஐயுங்கிலியும் குணமான அவ்வு முவ்வு மவ்வும் சிவ்வும், நாடியேநமசிவய சுவாகாவென்று நலமாகலட்சமுருஜெபந்தானோதே ... ... ... ... ... (௱௫௨)

ஓதியேசக்கரத்தைவைத்துக்கொண்டு உத்தமனேசோட்சமாம்பூசைசெய்து, சோதியேசக்கரத்தைவைத்துக்கொண்டு சுகமான மோடிவைக்கச்சொல்லக்கேளு, ஆதியேகோயில்முன்பு குளத்தின்முன்பு அப்பனேயம்பலங்கள்தெருவிலப்பா, நீதியாய்ப்போகருட்கடாட்சத்தாலே திடமாகக்கும்பம்வைக்கும் நீதிகேளே ... ... ... (௱௫௩)

நீதியாய்க்குருபாதந்தனைவணங்கி நினைவாகப்பெரியோர்கள்பதமும் போற்றி, மோதியேசித்தர்முத்தர்முனிகருப்பு முதலானராட்சதையுமே வல்வைப்பும், தீதானசத்துருக்கள்மிருகசாதி தீயகொடுவிஷமுதலா யெதிர்மில்லாது, மீதுநீநினைத்தபடியெல்லாஞ்சித்தி விதமானவாளுஞ்செக்குலக்கைகாட்டே ... ... ... ... ... (ாருச)

காட்டியேயுலக்கைமுன்பு தேங்காயொன்று நலமானதேங்காய்முன்குறடாவொன்று, கூட்டியேயதின்பின்புபாதரட்சை குறியாகவதின்முன்புதேய்ந்தமாறும், தேட்டியேயதின்முன்புவாழைநாட்டித் தெளிவானமங்கலிற்பூமாலைகட்டி, ஆட்டியேமாவிலைத்தோரணமுங்கட்டி யப்பனேபூசைபலிபெலக்கச்செய்யே ... ... ... ...(ாருரு)

பெலக்கவேயெட்டிமூளைகருவும்பூசிப் பேதமில்லையஷ்டதிக்கிலடித்துப்போடு-அலக்கவேகோட்டேழுகிழிப்போடு அப்பனேகாளியுட தியானமோது-சிலக்கவேயெதிரியைநீ யெடுக்கச்சொல்லு செயலாகவவன்வந்துசார்வானுகில், கலக்கவேகக்குகக்கு காளிநூர்ங்கி கருத்தாகஅரீ அம் ஆம்நமென்றே ... ... ... ... (ாருசு)

ஓதியேகண்கட்டுமையைவாங்கி யுததமனேகையதனிற் றடவிக்கொண்டு, வாதியேவேப்பிலையையுருவிப்போடு வளமானதேள்கொட்டி மயங்குவான்பார், ஆகியே ரங் ரங்கு சூலியென்று அப்பனேயுமூந்தோதியெறிய விழ்வான், சோதியேவழிவழி மறிசண்டாளி சுகமானமாங்காளி அம் அம்என்னே ... ... ... ... (ாருஎ)

எண்ணியேவிபூதியைத்தான் தியானமோதி எதிர்போடவவன்விழுவான்கண்டுபாரு, நண்ணவேஓம்படுசுவாகாவென்று நலமானவிபூதியள்ளியோதிப்போடு, கண்ணவேயவன்விழுவான்கோபிப்பான்யார் கனிவாகஅம் மம் நிம் ஓமென்றேதான்-உண்ணவே வேப்பிலைமண் ணுமூந்துடனேயரிசி யுத்தமனேவிபூதிமுத லோதிப்போடே ... (ாருஅ)

போட்டவுடனவன்விழுவானுதைத்துக்கொள்வான் பொங்குமுடனவன்வாயிலுமிரங்கக்கும், ஆட்டவுடன்மாறுசழல் குறடாவப்பா அடைவானதேங்காயு முலக்கைதானும், கூட்டமாயிதுகளெலா மெழுந்தடிக்கும் கொற்றவனேவாளெழும்பிவெட்டும்பாரு, நாட்டமுடன்காளியைத்தான் தியானஞ்செய்தால் நாயகனேயினவுயெல்லாமடிக்குந்தானே... (ாருகூ)

தானடா ஓம் சிங் வங் யங்மவென்று தயவாக அம் உம் அம் மம் மென்றோது, வானடா நங் மங் சிங் வங் யங்கென்று வளமான அங்ஷ அங்கஷ சுவாகாவென்று, கோனடாலட்சமுரு செபித்துப்போடு கொற்றவனே நினைத்தவெலாந் தம்மமாகும், நானடாபோகருட கடாட்சத்தாலே நலமானபுலிப்பாணி பாடினேனே ... ... ...(௱௬௰)

சோறுவேகாதிருக்க.

பாட்டேயின்னமொருவித்தைகேளு பண்பாகவெண்காந்தி வேரை வாங்கி, நாட்டவேகஞ்சாவித்தைக்கோலஞ்சேர்த்து நாயகனேயுலையரிசிதன்னிற்போட்டால், கூட்டவேசோறதுவும்வேகாதப்பாகொற்றவனேமாற்று மிதுக்கில்லையாரு, ஆடியேபோகருட்கடாட்சத்தாலே அப்பனேபுலிப்பாணியாடினேனே ... ... ... ... ... (௱௬௧)

பேயோட்ட.

பாடியே வங்சிங் சிவயநமவென்று மண்பாகச்செபித்தவுடன் பூசாசுபூதம்-கூடியேயோடுமடாகண்டுபோருகுணமாகவங்மங் சிங் சிவயநமவென்று, நாடியே ஜெபித்தவுடனழுகும்பாரு, நாயகனே சிவயநமசியென்று, சூடியேபசாசுமுதற்பூதமெல்லாஞ் சுறுக்காகவோடுமடாகண்டுமோரே உடுக்குகட்ட,

பாரடாசிவஞ்ஞெனசித்துடுக்கவைச்சான் பண்பாகச்சிவனம்மைபகவதியாணை - கூரடா ஐங்கிலியும்சவவும்கட்டு குறிப்பாகமாதவராணைகட்டு-சேரடாவராகி ஐம் கிலியும்சுவாகா சிறப்பாக ஆதியந்தங்கட்டுகட்டு வீரடாஜெபித்தவுடனுடுக்குகட்டும் விதமானபோகருட்கடாட்சந்தானே.

வியாதிபோக்க,

தானப்பாஓம்தூளியந்ததூளி-தயவாகமூன்திருக்கண்ணிற்பின்தூளிமானப்பாகாய்ச்சல்தலை வலியும்பாரிற் மறந்தோடச்சுவாமிகுரு வாணைபோவென்-றுனபபாவிபூதியைநீ தியானமோதி யளித்தவுடன்பலபிணியுமகன்றுபோகும்-வானயாபோகருட்கடாட்சத்தாலே-வளமானபுலிப்பாணிபாடினேனே... ... ... ... (௱௬௨)

நீலகண்டமந்திரம்,

பாடினேனீலகண்டஞ்சொல்லக்கேளு பண்பான ஓம்நீலகண்டருத்ரா - ஆடியேமங்சிங்சர்வ மாரணூத்தண்ட அடைவாகஉம்படுசுவாகாவென்று - கூடியேலட்சமுருசெபித்துத்திரு குற்றமறத்தற்கணமாயிரந்தான்பத்து-நாடியேயோமமா யிரந்தானப்பா நலமான அன்னமிடு நூறுபேர்க்கே... ... ... ... ... (௱௬௩)

பேரானபிராமணருக் கன்னம்போடுபேதமில்லை பூசையது மத்தே மாகும்-நேரானபூசையது வஸ்துசுத்தி நிறைத்துவிடுநீலகண்டன் சித்தி யாச்சு- சீரானதம்பனம்நீசெய்யவேண்டில்செயலாகச்சுவாமியைப்பொ ன்னிறமதாக - வீரானநீலகண்டத்தியானமப்பா விதமானமுகத்தில்நெஞ் சிலெண்கோணமோட்டே ... ... ... ... (௫௬௬)

ஓட்டியேலம்புரோமென்றுநாட்டி ஒளிவானவுநவப்பாமுப்பத்தாறு நீட்டியேசெபித்தவுடன்தம்பமாகும் திறமாகச்சகலமுந்தம்பிக்கும்பார்- காட்டிபேசுவாமிதனைவெள்ளையாகக் கருத்தில்வைத்து விபூதியிலேவட்ட ங்கீறி - ஆட்டியேயம்ரோமா யிரத்தெட்டோதியன்பாகக் கொடுத்தவுட னழைக்கும்பாரே ... ... ... (௫௬௭)

பாரடாசுவாமியைச்செந் நிறமதாகப் பண்பாகத்தியானித்து முக் கோணங்கீறிச் - சேரடாகிலியும்ரோமென்றுசொல்லிச் செயலாகவாயிர த்தெட்டுருசெபித்து-வீரடாவிபூதிதனை யணிந்துக்கொள்ளுவிதமாகச்சக லமும்வசியமாகும்- தீரடாபின்னொருவர் தனக்கேயீந்தால் திறமாகவசிய மாய் வணங்குவாரே ... ... ... ... ... (௫௬௮)

வணங்கியேசுவாமியைப்பளிங்குநிறமாக வளமாகத்தியானித்துப்பி றைபோற்கீறி-அணங்கியேயம்ரோமெனச்செபித்து அடைவாகவாயிரத் தெட்டுருத்தானோதி- நணங்கியேவிபூதியைப்பூசிக்கொண்டால்நாயகனே சகலமுமோகமோகம்-இணங்கியேசுவாமியைமேகநிறமாக இன்பமுறத்தி யானித்து நாற்கோணங்கீறே ... ... ... (௫௬௯)

கீறியேஓம்ரம்யம்ரோமென்று கிருபையாய்த்தென்னோலைதன்னி ல ப்பா - சீறியேஇருவர்பேர்தன்னைச்சூடிச சிறப்பாகவாயிரத்தெட்டுருசெ பித்து-வீறியேயெதிரியில்முன்னிறப்பில்வைக்கவிதமாகவிருவருமேபிரிந் துபோவார் - தேறியேசுவாமியைப்புகைவர்ணமாகத்தெளிவாகத்தியானி த்தைங் கோணங்கீறே ... ... ... (௫௭0)

கீறியேயம்ரோமென்றுநாட்டிக் கிருபையுடனாயிரத்தெட் டுருசெபி த்து- மாறியேவிபூதியைநீ போட்டபோது வரிசையுடன்சகலமு மோடி ப்போகும்- தேறியேசுவாமியைப்பிரளயகாலருத்ரனாய்த்தியானித்துமுக் கோணந் திறமாய்க்கீறி - ஏறியேரம்ரோமென்று நாட்டிஎளிதில்லைசத்து ருவின்செத் தெழுத்தைநாட்டே ... ... (௫௭௧)

நாட்டியேயாயிரத்தெட்டுருத்தானோதி நாயகனேயழல்காட்ட நீறிப் போகும் - வாட்டியேசகலமுமாரணமாய்ப்போகும் வளமானசுவாமியை க்கருப்பதாகக் - கூட்டியேதியானித்து மூக்கோணங்கிறிகுணமாகடம்மெ ன்று அதிலேநாட்டி-சூட்டியேயாயிரத்தெட்டுருத்தானோதிச் சுறுக்கப்பா நீறிட்டவே பேதகதானே... ... ... ... (௱எஉ)

சிவகிரிமகிமை.

தானானசிவகிரியில் தண்டாயுதபாணி தாதாவைப்பூசித்தோனாபிம னிந்திரன் - தேனானபோகருடனிவாகள்மூவர் தெளிவாகமுன்யுகத்தில் மூவரப்பா கோனானகலியுகமிருநூற்றைந்தில் கொற்றவனேபுலிப்பா ணிபூசித்தேன்பார் - மானான அஷ்டசத்திகோட்டாசத்தி மைந்தனேசித்த ருட நடனந்தானே ... ... ... ... (௱எ௩)

தானானராசரோடுகுருக்கள்பெண்கள் தயவானவேதியர்கள் சிறுவ ரேழை - வானானவிவர்களுக்கிடுக்கமான வஞ்சகத்தொழில்முறைகள்செ ய்தால்தோஷம் - கோனாகச்செய்தவர்கணரகில்வீழ்வார்குற்றம்வரு நற்ப தவிகிட்டாதப்பா - தேனானபோகருடகடாட்சத்தாலே தெளிவாகப்புலி ப்பாணி பாடினேனே ... ... ... ... (௱எச)

வாடியேசாத்திரத்தைப் பழித்தபேர்கள்பண்பில்லாக்கூன்குருடூமை யாகி-வாடியேசப்பாணி நொண்டியாகிவளமில்லாச்செவிடாகிரூபங்கெட் டுச் - சாடியேயவர்களெல்லாம் நாசமாகிச்சாவார்கள்பெண்டுபிள்ளையெல் லாஞ்சேர்ந்து-கூடியேவியாதியிலே யழுந்திமாய்ந்து கொடிதானநரகத்தி லழுந்துவாரே ... ... ... ... (௱எரு)

வாரானஐயும்நமோபகவதே ஓம்மகாரூபிமகாமாயிமகத்வசத்தி- தே ராகச்சர்வகாரணிசுவாகாவென்று தெளிவாகலட்சமுரு செபித்துத்திரு- சாரடாதர்ப்பணத்தோமேமன்னம் தயவானபூசையது திறமாய்ச் செ ய்நீ - கூரடாமகாமாயை சித்தியாச்சு குணமாக வதின்பெருமை கூ றக்கேளே ... ... ... ... (௱எசு)

கேளடாசத்தியைத்தான் பூசைசெய்யக் கேலிசெய்துசோதனைகள் பார்க்கவந்தால் - நாளடாமந்திரத்தைத்தியானஞ்செய்து நலமானவஸது சுத்தி பால்பூவென்று- வாளடாதியானித்து நினைத்தபோது வளமானபா ல்பூவாயிருக்கும்பாரு-ஆளடாபோகருட கடாட்சத்தாலே அப்பனேபுலி ப்பாணியருளினேனே ... ... ... (௱எஎ)

## கார்த்திகைவீரியார்ச்சுனமந்திரம்,

அருளாலே ஓம் ஆம் ஸ்ரீயும் கிலீயும் அரியகார்த்திகைவீரியார்ச்சு
னசுவாகாவென்று-பொருளாகலட்சமுரு செபித்துத்திரு பொங்கமாய்த்
தர்ப்பணமு மோமமன்னம் - வரமாகப்பூசையது மத்துஞ்செய்நீமைந்த
னேசித்திசசுக் கிரிகையாகும்- கருளாகநினைத்தபடியெல்லாஞ் செய்யும்
சுகமானபோகருடகடாட்சம்பாரே ... ... (௱எஅ)

## நரசிங்கமந்திரம்,

பாரடாநரசிங்கஞ்சொல்லக்கேளு பாங்காகஓம்சிங்கமுகவாஓம்-ஓம்
கூரடாபிடித்துகடித்தொடித்துசிந்திக் குணமாகக்கண்டுபிடித்தருளாளைப்
பேசல் - தீரடாபசாசுபேய்பொடியட்டோடத் திறமாகநரசிங்கராசாவா
ணை - சீரடா ஸ்ரீம் கிலீம் சுவாகாவென்று சிறப்பாகலட்சமுருசெபித்து
த்தீரே ... ... ... ... (௱எகூ)

தீரப்பாதர்ப்பணமுமோமமன்னம் திறமாகப்பூசையதுதெளிவாகத்
தான்-கூரப்பாயானைமுதல்மிருகசாதி கொற்றவனேகாடு செங்கெலழுதி
க்கட்டு - மாரப்பாமிருகத்தாற்கொடுமையில்லை பலன்கிட்டு நினைத்தபடி
யெல்லாஞ்செய்யும் - நேரப்பாபோகருட்கடாட்சத்தாலே நிச்சயமாய்ப்
புலிப்பாணிசொன்னேன்காணே ... ... (௱அ௰)

காணவேஓம்சர்வசத்துருநாசா கனிவாகஓம்படுசுவாகாவென்று-மா
ணவேலட்சமுருசெபித்துத்திரு வளமானதர்ப்பணமு மோமமன்னம்-
கோணுமற்பூசையது பலத்துச்செய்நீ குணமாகச்சாமமதுசித்தியாகும்-
காணுதுநினைத்தபடி யெல்லாஞ்செய்யும் நாயகனேபசாசுமுதற் பூதம்
போமே ... ... ... ... ... (௱அக)

## கெண்டபேரண்டமந்திரம்,

மோமப்பா இன்னமொன்று சொல்லக்கேளு பொலிவானகெண்ட
பேரண்டந்தன்னைத்-தாமப்பா ஆம்ஓம்அகோரப்பிரபல்ய தயவானகெண்
டபேரண்டசிங்கர- வாமப்பாவியாக்கிர சுவாகாசாகாமிருகாவளமாக்காற்
றுடுபல்லா அஷ்டவச்ரா-ஆமப்பாசூலமுதலாகவேதான் அடைவாகச்சங்
குசக்ராதியெண்ணே ... ... ... (௱அஉ)

எண்ணவேதாதுப்பிராணுமாவிதாத்மா இதமானகேசபட்சேயெந்த
னரசிம்மா-அண்ணவேகற்பாந்த அக்னிலீலா அடைவானஊதாப்புயங்கி
ரத்தில் - பண்ணவேகிலவச்ரசமானதுண்டா பண்பானதாஷ்டிக வுக்கிர
மூர்த்தி- உண்ணவேபட்சமாருதமாச்சந்தி உத்தமனேதாரணியில் நம்பி
யெண்ணே ... ... ... ... (௱அ௩)

என்னவேயுத்தண்டவஸ்திரசர்ப்பா என்னப்பாகெண்டபேரண்டஞ்சித்தி-மன்னவனேமூலமப்பாசொல்லக்கேளு வளமான ஓம் இறீம் ஸ்ரீயுமென்று-உன்னவேகிலீம்ஐயும்படுசுவாகா-உத்தமனே கெண்டபேரண்டநரசிங்கா - பன்னவேமகாசர்வானந்தகாயா பதிவானசர்வசத்துருநாசமாமே... ... ... ... ... ... (௱௮௪)

ஆமப்பாசிங்கிசிங்கியங்கியங்கி அடைவாகலட்சமுருத்தானேயோதுதாமப்பாதர்ப்பணமாயிரந்தான்பத்து-தயவானஓமப்பாஆயிரந்தான்-வாமப்பாபிராமணபோசனந்தானூறுவளமானபூசையதுநாள்பத்தப்பா-நாமப்பாகெண்டபேரண்டஞ்சித்தி நாயகனேசகலசித்துமாடும்பாரே (௱௮௫)

பாரடாபிரமனொடுவிஷ்ணுருத்திரன் பண்பானகுலிசனொடு தேவர்யாரும்-சீரடாசித்தர்முத்தர்முனிகள்பூதம் சிறப்பில்லாராட்சதையுமேவல்வைப்புர்-தீரடாசத்துருக்கள்மிருகசாதி தீதானவிஷமுதலா யெதிர்நில்லாது-வீரடாநினைத்தபடி யெல்லாஞ்சித்தி விதமானபோகருட்கடாட்சந்தானே... ... ... ... ... (௱௮௬)

பிரத்தியங்கிராதேவி மந்திரம்,

தானேதானின்னமொன்றுசொல்லக்கேளு தயவாகப்பிரத்தியங்கிராதேவிமந்திரம்-வானேதான்சகலசத்துருசம்மாரி வளமானசகலசம்பத்துமீவாள்-தேனேதான்கிருபைவாரிதியதானாள் தெளிவானகார்மேக வடிவமுள்ளாள்-கோனேதான் சிங்கமுகஞ்சிங்கப்பல்லும் கொடியமுக்கணுமக்னிச் சுவாலையெண்ணே ... ... ... (௱௮௭)

எண்ணவேயஷ்டதிக்குநிறைந்ததேகி இலகுமாயுதத்தோடா யிரங்கையுள்ளாள்-பண்ணவேகிண்கிணிமாலைகொண்டாள் பத்தர்கள்தன் சத்துருவைநாசஞ்செய்வாள்-அண்ணவேயுதிரமதுபானஞ்செய்வாள் அடைவானசகலசாஸ்திரமும்வல்லாள்-நண்ணவேநியானித்துச் சரணம்பண்ணு நாயகனேமூலமினிசொல்லக்கேளே ... ... ... ...(௱௮௮)

கேளப்பாசுவாலாஜிம்மேபிரத்தியங்கிரோணிதமுடன் உம்படு ஓம் ஆமென்று-நாளப்பா இறீம் ஸ்ரீயும்கிலீயுமென்று நலமானசிம்மமுகியுக்ரகாளி-சூளப்பாவட்டமுக்கோணமிட்டுச் சுகமாகவதின்மேலே யெண்கோணஞ்சதுரம்-ஆளப்பாவட்டமதிலிச்சமென்றிட்டு அரிய முக்கோணமேல்முனையிற்கேளே ... ... ... ... (௱௮௯)

கேளடாறீங்கார மதிலேயிட்டுக் கெணிதமாயிடக்கோணம் உம்மைநாட்டி-ஆளடா வலக்கோணம்படுவேயென்று அடைவாக எண்கோணம்ரீயைக்கேளு-நாளடாநாற்கோணம்வலமேல்மூலை நலமாகஆமென்று பதி

த்துப்போடு-சூளடா இடக்கோண மேலேயப்பா சுகமாகக்கிரோ மென்று
சூட்டிப்போடே... ... ... ... ... (௱௬௰)

போடேநீயிடக்கோணங்கீழேயப்பா பொங்கமுடன் புரோமென்று
பதித்துவைப்பாய்-ஆடேநீ வலக்கோணங்கீழேகானும் அப்பனே ஸ்ரீமெ
ன்று அடைவாய்ப்போடு-சூடேநீயட்சரங்கள்கிரந்தந்தன்னில் சூட்டினால்
வலுமையடாதக்டோதங்கம்-நாடேநீலட்சமுருசெபித்துத்திரு நாயகனே
தர்ப்பணமுமோமஞ்செய்யே... ... ... ...(௱௬௧)

செய்யப்பாபிராமணருக்கன்னம்போடு செயலாகவினைத்தயடியெல்
லாஞ்செய்யும் - கையப்பாபூசையது சத்திபூசை கவியாகச் செய்திடுவாய்
வெள்ளிதோறும்-ஐயப்பா இதற்கெதிரிசெகத்திலில்லை அப்பனேவானுல
கந்தன்னிலில்லை - உய்யப்பாபோகருடகடாட்சத்தாலே யுத்தமனேபுலிப்
பாணிபாடினேனே .. ... ... ... ... (௱௬௨)

பாடினேன்பூச்சக்கிர வாளத்துள்ளே பண்பான மகமேருபர்வதங்க
ளெட்டும்-நாடினேனவகண்டஞ்சத்ததீவு நலமானசத்தசாகரங்களேழும்
கூடியேயஷடதிகுள்ஐம்பத்தாறு குணமானதேசமெங்குஞ் சென்றுலு
ந்தான்-ஆடியேபிரத்தியங்கிராகிருபையாலே-அப்பனே செயங்கொண்டு
மீளலாமே ... ... ... ... (௱௬௩)

ஆமப்பாவிஷ்ணுநரசிங்கமாகி அடைவாகவிரணியனைக்கொன்றதோ
ஷம்-வாமப்பாபிரமைகொண்டமயக்கந்தீர வளமானஈஸ்வரனுஞ் * சரப
ரூபம்-தாமப்பாவடிவுகொண்டுநரசிங்கத்தைத் தான்கிழித்தே யுதிரமதை
க்கொண்டதாலே-போமப்பாமருள்கொண்டுமயக்கமிஞ்சிப் பொலிவான
ஈஸ்வரனு மிருந்தார்பாரே... ... ... ... (௱௬௪)

* சரபம்—சிம்புளாபட்சி.

பாரப்பாஈஸ்வரனார் மயக்கநீங்கப் பரிவானவிஷ்ணுகெண்டபேரண்
டமாகிச்-சேரப்பாசரபத்தைப்பிளந்துபானஞ் செய்தத்தா லீஸ்வரற்குப்
பிரமைபோச்சு - நீரப்பாகெண்டபேரண்டமப்பா நிறமழிந்துமருள்கொ
ண்டு மயக்கமாகிக்-கூரப்பாதேவர்களையடித்ததாலே குணமானஈஸ்வரனு
மோடலாச்சே... ... ... ... ... (௱௬௫)

ஆச்சடா இதனைப்பார்வதியார்பார்த்து அடைவானபிரத்தியங்கிராரூ
பமாகி-வாச்சடாகெண்டபேரண்டபட்சி மதநீங்கத்தான்பிடித்துச்சிரசை
க்கொய்யப்-போச்சப்பாபிரமையது நீர்ந்துபோச்சு பொலிவானவிஷ்ணு
வுந்தன் னுருவமானார்-வீச்சபபா போகருடகடாட்சத்தாலே விதமானபு
லிப்பாணி பாடினேனே ... ... ... ...(௱௬௬)

அயச்செம்பு.

பாடியேயயச்செம்பு சொல்லக்கேளு பண்ணாக்கற்றுமனாயின்கிழங் கையாட்டிக் - கூடியேயிரும்புகளின் மேலேபூசிக் கூசாமற்புடம்போடச் செம்பதாகும்-ஆடியே யயசசெம்புஏழகாகும் அப்பனேவெள்ளியெடை யொன்றுகூட்டி - நாடியேயுருக்கிட்டேவேயேழுமாற்று நாயகனேதப்பாது செய்துகேளே... ... ... ... ... (ஈகூஎ)

கேளேயச்செம்பொன்றுதங்கமொன்று கெணிதமுடன்தானுருக்கி த்தகடாய்த்தட்டிச்-சூளாகப்பொடியாக நறுக்கியப்பா சுத்திசெய்த ரசமி ரண்டுகூடவிட்டு-நாளானகெந்தியெடை நாலுங்கூட்டி நாயகனேதாரமெ டை யனையுஞ்சேர்த்து - வாளானபொற்றலையின்சாற்றலாட்டி வளமாக வுலரவிட்டுக் குப்பிக்கேற்றே... ... ... (ஈகூஅ)

ஏற்றப்பாசட்டிக்குள்மணல்விரல்தானுலு இதமாகநீகொட்டிக்குப்பி க்கேதான்-மாற்றமாமண்சிலையேழுசெய்து வாய்மூடமாக்கல்லை யுனைத்து மூடு - சாத்தவேகுப்பிவைத்து மணலைக்கொட்டிச் சார்வாகக்குப்பிவாய் கழுத்துமட்டும்- ஊற்றமாய்நாற்சாமமெரித்தேயாற்றி யுத்தமனே யெடுக் குச்செந்தூரமாமே... ... ... ... ... (ஈகூகூ)

ஆமப்பாநவலோகம் பத்துக்கொன்று அப்பனேதான்கொடுக்கமாற் றேபத்து-தாமப்பாதேவிக்கும் நிருவாணிக்கும் தயவாகப் பூசைசெய்து நிலையில்நின்று-வாமப்பாபெரியோரைவணங்கிவாழ்த்தி வாழ்குவாயுலகம திற்சிமானுக-நாமப்பாபோகருடகடாட்சத்தாலே நலமானபுலிப்பாணிபா டினேனே... ... ... ... ... ... (உஈ)

இரசமணி,

பாடியேரசம்பத்து சுத்திசெய்து பண்பானநாகத்தின் வாயில்வார்த் து-ஆடியேமுப்பூவுங்கழஞ்சிபோட்டு அடைவாகக்கட்டிநீமேலேதூக்கு- கூடியேயதின்கீழேயானைவைநீ கொற்றவனேபாம்பமுகி வீழும்பாரு-நா டியே ரசங்கட்டிமணியாய்ப்போகும் நாயகனே வேதைமுதல் வசியமா மே... ... ... ... ... ... ... ...(உஈக)

ஆமேநீ கெந்தியிட்டுச் செந்தூரித்தால் அப்பனே நவலோகந் தன் னில்வேதை-வாமேநீஇருநூறுமிந்திரசாலம் வளமானகண்ணாடி போலே தோற்றும்-தாமேநீநவரத்நங்கோத்தாற்போலே தரணிதனில்தான்விளங் கும் புலிப்பாணிதானும் - நாமேநீபோகருடகடாட்சம்பெற்றேன் நலமா னசாலமிரு நூறுமுற்றே... ... ... ... (உஈஉ)

புலிப்பாணிஜாலத்திரட்டு-முற்றியது.







சிவமயம்.

புலிப்பாணிமுனிவரருளிச்செய்த

# சிதம்பரம் உரு.



அத்திமுகன் றனையளித்த வரனேகாப்பு .. ... ... *
அகிலமெங்கு நிறைந்துநின்ற வருளேகாப்பு ... ...*
முத்திதரும் வேதாந்த முதலேகாப்பு ... ... *
முப்புரத்தைத் தகித்தெரித்த வரனேகாப்பு... ... *
சத்தியொருபர்கம்லைத்தவரசேகாப்பு... ... ...*
சங்கரனேயம்பரனேஞானமூர்த்தி ... ... *
வெற்றியாஞ்சிதம்பரத்தின்பூசைமார்க்கம் ... *
விளம்புகிறேன்கணேசனுடபாதங்காப்பே... ... *

காப்பானஆறுவகைகுறுக்கேகேறிக்... ... ...*
களங்கமிலாஆறுவகைநேரேகீறி ... ... *
ஆப்பானஇருபத்தஞ்சறையுமாச்சு ... ... *
அடைவானமுனைதோறுஞ்சூலம்போடு ... *
தாப்பானமுதலறையிறுலுகோணங்... ... ...*
தயவானஙகாரமொடுஅகாரங்கூட் ... ... *
வாப்பானஐயோடுவகாரந்தானும் ... ... *
வளமானலக்கமதுபத்துமாமே... ... ...(க)

ஆமப்பா அடுக்கறையிற்பிறைதான்கோணம் .. ... *
அடைவானமகாரமொடுஇகாரங்கூடத் ... ... *
தாமப்பாகிலியோடுவகாரந்தானும் ... ... *
தயவானலக்கமதுபதினெட்டாகும் ... ... *
வாமப்பா அடுத்தறையில்முக்கோணந்தான் ... *
வளமானசிகாரமொடுஉகாரந்தானும் ... ... *
காமப்பாசவ்வுடனேசகாரந்தொட்டு ... ... *
கலமானலக்கமதுமதினுலாமே ... ... (உ)

ஆமடாஇகினருகேயறுகோணந்தான் அடைவானவகாரமொடுஎகாரந்தானும், தாமடாஸ்ரீமுட்டனேயகாரங்கூடத் தயவாகலக்கமது ஆறும்பாரு, வாமடாஇகினருகேவட்டம்போடுவளமானயகாரமொடுஓங்காரந்தான் காமடா ஹரி ஓமென்றுநாட்டி கலமான அகாரமொடு லக்கமூன்றே (ங)

மூன்றானநிவணையை ஈயெடுத்துமாறி மூன்றுமாய்சக்கரமோ ரிரு ைத்தஞ்சில்- நான்றானசூலத்தினிடைகள்தோறும் நாயகனே நீயும் ஸ்ரீமெ ன்றுமாட்டுப் - பான்றானசூலமூனை ஸ்ரீமைப்போடு பண்பானதிரிவட்டம் பாங்காய்சூட்டு - ஊன்றானஉள்வட்ட மிதழ்தான்மூன்றுஉத்தமனேயிரு வட்டமிதழீரெட்டே ... ... ... ... (௪)

எட்டானதிரிவட்டமெண்ணுன்சப்பா இதமாகநிவட்டமுதலாமாதி- காட்டான அகாரமுதல் சகாரமிட்டு கனிவாகஜெம்பத்தொன்றுமாச்சு - இ ட்டானஉபரோசைவாசல்நாலு சிழ்வாசல்கணபதிக்குக்கங்குநாட்டு - நட் டானமேல்வாசல்வடுகன் *பீஜம் நாயகனேவங்கென்றுநாட்டிடாயே (௫)

நாட்டியேதென்வாசல் யரிதிபீஜம் நலமாகஅம்மென்றுநாட்டுநாட்டு கூட்டியேவடவாசல்மதியின்பீஜம் குணமாகச்சம்மென்றுகுறித்துப்போ டு-ஆட்டியேயுபரோசைவீதிக்குள்ளே அடைவாக இந்திரனிலமாம்யாரு வாட்டியேயக்கினியில்ரம்மென்றப்பா வளமாகஎமன்றனிற் ,சம்மென்று யோடே ... ... ... ... ... (௬)

போடவேநிருதியிலேயம்மேயாகும் பொலிவானவருணனிலே வம் மேபாரு-சாட்டவேவாய்வுதனில் யம்மேபோடு சார்வானகுபேரனிலேஸ ம்மேநாட்டு-வீட்டவேஈசானஞ்சம்மேசேரு விதமான அஷ்டதிக்குப்பால ராச்சு - ஆட்டவேபோகருட கடாட்சத்தாலே அப்பனே புலிப்பாணி பாடினேனே ... ... ... (௭)

பாடினேன்தமிழெழுத்தில் அகாரந்தொட்டுப் பண்பானபிரணவத் தின் வரைக்கும்போடு- ஆடியேதசாங்கமென்ற எழுத்தோமத்து அப்ப னே சக்கரத்திற்சுற்றிப்போடு-கூடியேதமிழெழுத்தில் அகாரந்தொட்டுக் கொற்றவனேஔவ்வரையி லுயிராம்பாரு-நாடியேசக்கரத்திற்சுற்றிப்போட நலமாகஈராறுமெழுதலுமாச்சே ... ... (௮)

ஆச்சப்பா அசரையுடஎழுத்துச்சம்அம் அடைவாகமேல்வாச்ற கீ ழேயோடு - மாச்சப்பாவலமங்கிசத்திபீஜம்பண்பான அம்மென்றுமதித் துப்போடு - வாச்சப்பாஇடம்பார்சதகிபீஜம் வளமாகத்ஹ்ரோமென்றுகு றித்துப்போடு - வீச்சப்பாவலப்பாகமிடப்பாகந்தான் - விதமானஐயுங்கி லியுஞ்சவ்வுமாமே ... ... ... (௯)

---

* பீஜம்-இதழ்,

ஆமடா அம்இம்உம்எங்லுமென்றே அப்பனேபஞ்சபட்சிஇருபுறமும்போடு-வாமடா அம்சம்ஸ்ரீயுமென்று வளமானமங்குடனேநசியென்றேது- தாமடாகிறீமுடனேறும்ருங்கூட்டித் தயவானவிம்றூடனேயங்கியொன்று-காமடாநவக்கிரகபீஜமாசசு நலமானசக்கரத்திற் சுற்றிப்போடே. (௰)

போடப்பாசுருபியென்றவெழுத்துமப்பா புகழ்தருவும்கிலியல்லோமதனபீசம்-காடப்பாகீழ்வாசல் மேலேயப்பா நலமானஈதிரண்டும்பதித்துப்போடு-கூடப்பாசிதம்பரத்தின் பூசைசெய்யக்கூத்தாடுங்கணங்கள்முதலெல்லாமாடும்- ஆடப்பாபோகருடகடாட்சத்தாலே அடைவாகப்புலிப்பாணியாடினேனே ... ... ... ...(௰௧)

பாடியே அகாரத்திலுகாரமிட்டுப்பண்பான ஓங்காரங்கொண்டுகட்டி-காடியேயதின்கீழேமகாரமிட்டு நலமாக அதின்மேலே றீங்காரந்தான்-கூடியேஹரியெழுத்துமேலேவாங்கிக் குணமாகசூலமிட்டு ஸ்ரீயைநாட்டு-ஆடியேசிங்குவங் கென்றுநாட்டி அடைவாயே காட்சரத்தைப் பதித்துப்போடே ... ... ... ... ... (௰௨)

போடுசிந்தாமணிக்குச் சிகாரமிட்டுப் பொங்கமுடன்மகாரமொடுயகாரம்போட்டு- ஆடவேஅகாரமுடன்விந்தைப்போட்டு அடைவாஞ்சக்கரத்தில்திருவாசிசுட்டக் - கூடச்சிந்தாமணிக்குப்பீஜமாச்சுகுணமானசக்கரத்திற்பதித்துப்போடு- காடியேபோகருடகடாட்சத்தாலே நலமானபுலிப்பாணியாடினேனே ... ... ... (௰௫)

பாடியேவலப்புருவம்அகாரம்போடுவண்பானபுருவ இடம்ஆகாரமாகும்-நாடியேவலக்கண்ணும் இகாரம்போடுநலமானஇடக்கணணும் ஈகாரந்தான் - சாடியேவலக்காதுஉகாரமபோடு சமர்த்தானஇடக்காது ஊகாரந்தான் - வாடியேவலிதுகன்னம்இறேம்நீபோடுவடிவான இடக்கன்னம் சறேம்நாட்டே ... ... ... ... (௧௪)

நாட்டடாவலமூக்குஇல்லாவென்று நாயகனேஇடமூக்குஈலாவாகும்-ஆட்டடாமேலுதடுஏயைப்போடு அடைவானகீழுதடு ஐயைப்போடு-கூட்டடாமேற்றந்தம்ஓவ்வைப்போடுகுணமானகீழ்த்தந்தம் ஔவைநாட்டு - மாட்டடாநாவதிலே அம்மென்றப்பா மணியானகண்டத்தில் ஆகாரமெண்ணே ... ... ... ... ...(௧௫)

எண்ணவேசக்கரத்திற்பதித்தபின்பு இகமாகச்சாபங்கணி வர்த்தி
செய்து-நண்ணவேபிராமணப்பிரதிஷ்டைசெய்து நலிலோமம்பூசைசேச
டசமுஞ்செய்து - அண்ணவேசுகந்தபரிமளங்கள்புட்பம் அடைவாகவர்
ச்சித்துக்கனிகளோடு-தண்ணவேபலகாரம்பரமான்னந்தான்தாம்பூலமிள
நீரும்பாலுந்தேனே ... ... ... ... (௧௬)

தேனுடையானக்கமன்னத்தோடு தெளிவானவறுசுவையு மதுவுஞ்சு
த்தி - தானனசர்வமுஞ்சுத்திவைத்து தயவாகப்பூசித்துத்தியானமோது-
வானனகர்ப்பூர தீபமேற்றிவணங்கவே அஷ்டசித்துஞ்சித்தியாகும் - மன
ஞன அஷ்டசத்தி நிர்த்தஞ்செய்வாள் வானவரும் லோகமெலாம் வசி
யமாமே ... ... ... ... (௧௭)

ஆமடாசிவகிரியில்தண்டாயுதபாணி ஐயனைத்தான்பூசித்தோர் சொ
க்கேளு - தாமடாகிரேதாயுகத்திலப்பா தயவானபிரமாவும் பூசைசெய்
தார்- வாமடாதிரேதாயுகத்திலப்பா வண்மையாக் கவுசிகர்தாமகிழ்ந்தல்ல
து செய்தார் - காமடாதுவாபரத்திற்போகநாதர் கலியுகத்திற்புலிப்பாணி
பூசித்தேனே ... ... ... ... (௧௮)

பூசித்தஞானமதுதொண்ணூற்றாறு பொங்கமுடன்பலதிரட்டுநூறு
மாகும் - ஆசித்தேன்கொக்கோகம்நூறுபாதி அப்பனேசாலமதுரண்டு
நூறு - வாசித்தேன்சோதிடந்தான்மூன்னூறாகும்வளமானவயித்தியமோ
ஐஞ்ஞூறாகும்-வீசித்தேன்சண்முகத்தின்பூசைமார்க்கம்விதமாகமுப்பதி
லேவிளம்பினேனே ... ... ... (௧௯)

விளம்பவேசிமிழ்வித்தை யிருபத்தஞ்சுவிதமானதேவியுடபூசைமா
ர்க்கம் - தளம்புவேபிருபதோடொன்றினுள்ளேதயவாகச்சொல்லிவைத்
தேனன்றுய்ப்பாரு-இளம்பவேசிதம்பரந்தானிருபத்தஞ்சு கெட்டியாய்ப்
பாடினேனுகந்துபாரு- வளம்பவேயோகருடகடாட்சத்தாலே வளமான
புலிப்பாணிபாடினேனே ... ... ... (௨௰)

பாடினேன்யநமசிவவசியமாகும் பண்பானமசியநமோகனமேசித்தி
ஆடியேவசிமநயஅழைப்புமாகும் அப்பனேநமசிவயதம்பனமேசெய்யும்
கூடியேவயநமசியுச்சாடந்தான் குணமானயவசிமநபேதனந்தான் - தே
டியேநயவசிமவித்து வேஷணம்சிவயநமமாரணமாய்ச்செப்பலாமே(௨௧)

ஆமடாவசியமுடன்தம்பனம்பேதனம் அடைவான் நடுவிணைமை
ப்பிடித்துமீறி - தாமடாமோகனமுமழைப்புமப்பா தயவாகரண்டெழுத்
தையெடுத்துமாறி-வாமடாநாலெழுத்தைமாறில்வித்துவேஷணம் - மன்
னுமுச்சாடனங்கால் தலையாப்போடு - தீமடாமாரணங்கடையெழுத்தை
மாறித்தீர்த்தசக்கரமேலாமாரணமாமே ... ... ... (௨௨)

ஆமடாகாரீயம்வசியமாகும் அப்பனேவங்கமோகனமேசித்தி- தாம
டாபொன்னதுவுமழைப்புமாகும் தயவானசெம்பதுதம்பனமேசித்தி-வா
மடாவெள்ளீயமுச்சாடிக்கும் வளமானகுறுக்தோலே வித்துவேஷணம்-
போமடா இரும்புபேதனமேயாகும் பொங்கமுறுவெள்ளி மாரணந்
தானுமே ... ... ... ... ... ... (௨௩)

தானென்றவசியமுடன்தம்பனமோகனம் தயவான அழைப்புமுதலி
வைநாலுக்கும்- கோனென்ற சுள்காட்டிவிரலேநீளம் குணமான அகலம
ப்பாபெருவிரல்நீளம்-தேனென்றபேதனமாரணம் வித்துவேஷணம்-தெ
ளிவானஉச்சாடனமிவைநாலுக்கும் - மானென்றமவித்திரவிரல் நீளமப்
பா-புகர்ந்தசிறுவிரனீளமகலமாமே... ... ... (௨௪)

ஆமடாஇறையாறுவீசமாகும் அப்பனேமணிரண்டு அரைக்காலு[illegible]
ம் - தாமடாமூவெட்டுக்காலேயாகும் தயவாகஇகிலிரட்டியனையேயாகு
ம்-வாமடாஇகிலிரட்டிமுழுதென்பார்கள் வளமானகனமப்பா நெற்கனந்
தான் - நாமடாவீசமது ஒருநெல்லாகும் நலமானசிதம்பரத்தின் பூசை
முற்றே ... ... ... ... ... (௨௫)

புலிப்பாணிமுனிவரருளிச்செய்த

சிதம்பரம் ௨௫ - முற்றுப் பெற்றது.





